உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள் அவர்கள்
அருளாணையின் வண்ணம்
வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.

சிறப்பாசிரியர்:
பன்மொழிப்புலவர்
டாக்டர். திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், மதுரை.

ஆசிரியர் குழு:-
பேராசிரியர்
திரு. அ. ச. ஞானசம்பந்தன், M. A., சென்னை-28
திரு. கம்பன் அடிப்பொடி, காரைக்குடி
திரு. மு. அருணாசலம், M. A., திருச்சிற்றம்பலம்
திரு. கா. ம. வேங்கடராமையா, M. A., அண்ணாமலைநகர்
மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர், மதுரை
மகாவித்துவான்
திரு. சி. அருணைவடிவேல் முதலியார், அண்ணாமலைநக..
திரு. க. வச்சிரவேல் முதலியார், B. A., L. T., மதுரை
புலவர் திரு. கீரன், லால்குடி
டாக்டர் திரு. டி. பி. சித்தலிங்கையா, M. A., கல்கத்தா
திரு. கு. சுந்தரமூர்த்தி, M. A., திருப்பனந்தாள்

நிர்வாக ஆசிரியர்:-
ம. வே. பசுபதி, திருப்பனந்தாள்



# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 2 ஆனி பகுதி 9

## கருத்தரங்கம்

இந்த இதழில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் 'சர்வேஸ்வரனே ஆண்; மற்ற ஜீவர்கள் பெண்களே' என்ற கருத்துப்பற்றி ஸ்ரீ குமரகுருபரரின் திண்மையான வாதத்தை எடுத்துக்கூறி மெய்ப்பிக்கிறார்கள். ஸ்ரீ குமரகுருபரரின் கருத்துக்கு இலக்கண உலகம் ஒத்துவரும் முறைமை பற்றியும் விளக்கியருளியுள்ளார்கள்.

நூல்நிறைப் பகுதியுள் அண்மையில் ஸ்ரீ காசிமடம் வெளியீடாக வந்துள்ள சில நூல்களும் பிறவும் விமர்சிக்கப் பெற்றுள்ளன.

இந்த மாதம் விடையரங்கத்துள் ஒருவர் வினவுக்கு ஒருவர் விடையாத எஞ்சியிருந்தவை பிரசுரிக்கப்பெற்றுள்ளன. ஒருவர் வினவுக்குப் பலர் விடை என்ற முறை அடுத்த இதழிலிருந்து தொடர்ந்து வரும். அடுத்த மாதம் வெளிவரஉள்ள விடையரங்கத்திற்குரிய வினு கீழே குறிக்கப்பெற்றுள்ளது. வாசக அறிஞர்கள் விடையெழுதினுலும் தக்கவை அடுத்த இதழில் பிரசுரிக்கப்பெறும்.

சாஸ்திர விளக்கப் பகுதியில் திருக்களிற்றுப்படியார் மூலத்திற்கு திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள் விளக்கம் எழுதிவந்தார்கள். அது முற்றுப்பெற்றமையின் தொடர்ந்து சாஸ்திர விளக்கம் பகுதியில் 'இருபா இருபஃது' நூலுக்கு அவரே விளக்கம் எழுதுகிறார்.

வெளிவராத இலக்கியத்தை வெளியிடும் பகுதியில் மூன்று திங்களாகவெளிவந்த திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பா அந்தாதி இந்த இதழுடன் நிறைவுபெறுகிறது.

நெல்லை, புலவர் திரு. சிவசம்பு அவர்களின் சிவந்த கால்கள் என்னும் கட்டுரையும், திரு. பால சுப்பிரமணியம் அவர்கள் எழுதும் பொன்னம்பலத்தின் தத்துவங்களும் வரலாறுகளும் என்ற கட்டுரையும் பல வியத்தகு செய்திகளைத் தாங்கி வெளிவந்துள்ளன.

அறிஞர் திரு. மு. அருணசலம் அவர்களின் கந்தர்கலி வெண்பாவுள் சமயம் என்ற கட்டுரைத் தொடரின் ஒரு பகுதி இவ்விதழிலும் வெளிவந்துள்ளது. பலரும் அறியாத புதிய செய்திகள் இப்பகுதியில் நிறைய உள்ளன.

வழக்கம்போல ஏற்றுமதி, இறக்குமதி, இதமான வாழ்வுக்கு எளிய வழிகள், தலயாத்திரை முதலிய பகுதிகளும் இந்த இதழுக்கு அணி செய்கின்றன.

-- நி. ஆ-ர்.

---

**அடுத்த விடையரங்கப் பகுதிக்கான வினு:**

விதிப்படிதான் எல்லாம் நடக்கும் என்றுல் கடவுளை வழி படுவதன் இம்மைப்பயன் என்ன? — முத்து. மெய்கண்ட தேவன்

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ

உ

சிவ சிவ

தில்லைத் தமிழ் மன்றத்தில்

# திருவாசகப் பிரசங்கங்கள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்**

ஆணையின் வண்ணம் நடைபெறுவது.

இடம் : சிதம்பரம் கனகசபைநகர் தருமையாதீனத் திருமடம்
நாட்கள் : 16—6—80 முதல் 20—6—80 வரை 5-நாட்கள்
நேரம் : நாடோறும் மாலை 7-முதல் 8-30 மணி வரை

| நாள் | பொருள் | சொற்பொழிவாளர்கள் |
|---|---|---|
| 16-6-80 திங்கள் | நான்கு அகவல்கள் — | திரு. சு. சாமி ஐயா, M. O. L., |
| 17-6-80 செவ்வாய் | திருச்சதகம் — | திரு. செ. வைத்தியலிங்கம், M. A., |
| 18-6-80 புதன் | தில்லைத் திருவாசகம் — | மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் |
| 19-6-80 வியாழன் | திருப்பெருந்துறைத் திருவாசகம்— | வித்துவான் திரு. தா. ம. வெள்ளைவாரணம், திருப்பனந்தாள் |
| 20-6-80 வெள்ளி | பிறதலத் திருவாசகம் — | கல்வெட்டாராய்ச்சிப் புலவர் திரு. கா.ம. வேங்கடராமையா M.A., |

நமரங்காள் வருக !

தில்லைத்தமிழ் மன்றம்,
சிதம்பரம்.

ஆணைப்படி,
G. வாகீசம் பிள்ளை,
S. திருநாவுக்கரசு பிள்ளை.

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச்சுவை

மக்களும் தேவரும் நரகரும் உயர்திணை. உயர்திணையில் ஆண்பால், பெண்பால், பலர்பால் என்ற பகுப்பு உண்டு. அஃறிணையில் ஒன்று பல என்ற பகுப்பு வரையறுக்கப் பட்டதென்றாலும் அவற்றுள்ளும் வழக்கில் ஆண் பெண் பகுப்பு உண்டு. சேவல், ஆண்; கோழி, பெண் — இயங்குதிணையாகிய அஃறிணையில் வழக்கை யொட்டிய ஆண்பெண் பகுப்புக்கு இவை உதாரணங்கள். ஆண்பனை, பெண்பனை - நிலைத்திணையில் ஆண்பெண்பகுப்பு வழக்கில் உள்ளமைக்கு இவை உதாரணங்கள்.

காட்சி நிலையில் அஃறிணையில் ஆண்பெண் பகுப்பு உண்டென்றாலும் இலக்கியங்கள் அவ்வழக்கைப் பெரிது படுத்துவதில்லை.

'சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்று லுலகே'

என்ற குறுந்தொகையின் கடவுள் வாழ்த்துப்பாடல், முருகப் பெருமானின் கொடியைச் 'சேவற்கொடி' என்று குறிக்கிறது. அருணகிரிநாதர்,

'கோழிக் கொடியோன் அடிபணியாமல் குவலயத்தே
வாழக் கருதும் மதியிலிகாள்'

என்று அக்கொடியைக் கோழிக்கொடி என்கிறார். இலக்கண உலகம் மட்டுமன்றி இலக்கிய உலகமும் அஃறிணையில் பிரத்யட்ச நிலையில் உள்ள ஆண்பெண் பகுப்பை ஏற்று உரைப்பதில்லை என்பதற்கு இவை உதாரணங்கள்.

ஆனால் உயர்திணையில் உள்ள ஆண்பெண் பகுப்புக்கள் கண்கூடானவை; இலக்கிய இலக்கணங்கள் ஏற்றுக் கொண்டவை. என்றாலும், இதற்கும் மேலே ஓர் உண் மையைச் சாத்திர உலகம் கண்டு சொல்கிறது. "பரம் பொருள் ஒன்றே ஆண்; சீவர்கள் பெண்களே" என்பதே அவ்வுண்மையாகும்.

ஆளும் தன்மையே ஆண் என்றாகிறது. ஒன்றன் ஆளு கைக்கு உட்பட்டவன் ஆளுவது சாத்தியமற்றது. கடவுள் மட்டுமே ஆண்; கடவுளின் வேறு ஆகாதவனாகிய குரு நாதனே ஆண். ஏனெனில் அவனைப் பிறிதொன்று ஆளு வது கிடையாது.

கடவுள் மட்டுமே ஆண் என்ற கருத்தை ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் அவர்கள் காரணம் சொல்லி விளக்கு கிறார். தத்துவங்கள் தலைமையானவை. தத்துவங்களுக்குக் கீழ்ப்பட்ட எவையும் ஆளுமைக்கு உரிமையற்றவை. சர்வேஸ்வரன் மட்டிலுமே தத்துவங்களுக்கு மேலான வனாக - தத்துவாதீதனாக விளங்குகிறான். கருவிகள் - தத்து வங்கள். கருவிகளுக்குத் தலைமை போலக் காட்டி மனிதர் களும் ஆண் பெயர் பெற்றுக்கொள்கிறார்கள். 'உண்மை யில் நாங்கள் சக்திகளே' என்கிறார்.

'கருவிகட்கு இறைமை காட்டுபு நிற்றலில்
புருட நாமம் புனைந்தனம் ஆயினும்
அத்த!நின் குறிப்பில் சத்திகள் யாமே!'

[கருவிகள் - தத்துவங்கள்; இறைமை - தலைமை; காட்டுபு - காட்டிக்கொண்டு; புருடநாமம் - ஆண் பெயர்; அத்த - தலைவனே; சத்திகள் - பெண்கள்.]

நாங்கள் கருவிகட்கு இறைமை கொண்டு புருடநாமம் புனைந்துள்ளோம் என்று இப்பகுதிக்குப் பொருள் கொள்ளக் கூடாது. கருவிகட்கு இறைமையாதலே புருட நாமத் திற்குக் காரணம் என்றும் அத்தகு பாவனையால் நாங்களும்

புருடநாமம் புனிந்தனம் என்றே பொருள் கொள்ள வேண்டும்.

கடவுளே ஆண்! சீவர்கள் யாரும் சக்திகளே என்ற கருத்துக்கு ஒரு பிரமாணம் சொல்கிறார்.

புருஷோத்தமன் என்ற பெயர் திருமாலைக் குறிக்கும். அச்சொல்லுக்கு ஆண்களுக்குள் உத்தமமானவன் என்பது பொருளன்று. அப்படிச் சொன்னால் ஆண்கள் பலர் இருக்கிறார்கள் என்றாகும். புருஷோத்தமன் என்பதற்கு நல்ல ஆண் என்பதே பொருளாகும். ஆண் நாமங்களுக்குள்ளேயே உத்தம நாமம் பெற்ற திருமாலே சிவனுக்குச் சக்திதான். இந்த உதாரணம் சிவம் மட்டுமே ஆண் என்பதற்குச் சரியான சான்றாகும்.

'புருடனைச் சத்தியில் புணர்ந்தனை அன்னதற்கு
ஒருகாட் டென்ப புருடோத் தமனே.'

[புணர்தல் - சேர்தல்; காட்டு - உதாரணம்; புருஷ உத்தமன் - புருஷோத்தமன்; வடமொழிப்புணர்ச்சி.]

இப்பகுதிக்குப் பிறகு ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நாயக நாயகி பாவத்தில் கவி சொல்கிறார். பெண்ணாகிய சீவன் ஆணாகிய சிவனைக் காதலிக்கிறது. இந்தக் கட்டத்தில் 'ஒன்றே தன்மை உனக்கும் மற்று எமக்கும்' என்று தொடங்கிக் கூறிய செய்திகள் முற்றப்பொருத்தமாக இருக்குமா என்று நமக்கு ஐயம் எழலாம். அதை சுவாமிகள் கருத்துட்கொண்டு "முன்னர் உமக்கும் எமக்கும் ஒப்புமைப் படுத்திச்சொன்ன கருத்துக்கள் முழுமையாக ஒவ்வாமற் போனாலும் போகட்டும்; நான் இழிந்தவளாயினும் உன்னைக் காதலிப்பது உறுதி" என்கிறார்.

'உன்னுடன் எம்மையும் ஒப்பெனப் படுத்து
முன்னற் கூறிய முறைமையிற் சிற்சில
முழுவதும் ஒவ்வாது ஒழியினும் ஒழிக'

[ஒப்பு - சமம்; முறைமை - வரிசை; ஒவ்வாது - பொருந்தாது.]

முன்னற்கூறிய முறைமை என்றது இப்பாடலின் ஒன்று முதல் பத்து அடிகள் வரை சீவனுக்கும் சிவனுக்கும் உள்ளதாகக் கூறிய ஐந்து ஒப்புமைகள். இம்மூன்று அடிகளும் இப்பாடலுக்குள்ளேயே இப்பாடலுக்கு சுவாமிகளே அருளிய குறிப்புரை ஆகும். இதனைக் கருதியே அவ்வொப்புமைகளுள் நிந்தாஸ்துதி போன்றதொரு பாவம் அமைந்திருந்தமையைச் சுட்டிக் காட்டி விமரிசனம் செய்திருந்தோம்.

உலகியல் காதல், சமத்துவம் வாய்ந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் நிகழ்வது என இலக்கணங்கள் கூறுகின்றன.

'பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே'

என்று தொல்காப்பியம் அந்த ஒப்புமைகளைக் குறிக்கிறது. அவற்றின் விளக்கங்களை ஆண்டுக்காண்க. ஆனால் தொல்காப்பியமே தலைவி இழிந்தவளாக இருந்தாலும் குற்றமில்லை என்றும் அறிவித்துள்ளது.

'ஒன்றே வேறே என்றுஇரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோ னாயினும் கடிவரை யின்றே'

என்பது அக்கருத்தைத் தெரிவிக்கும் தொல்காப்பியக் களவியல் சூத்திரம். இவ்விலக்கணப் படியாக (சீவர்களாகிய) இழிந்தபெண்கள் (சிவனாகிய) உயர்ந்த ஆணைக் காதலிப்பது குற்றமன்று என்பதால் நாங்கள் உம்மைக் காதலிக்கிறோம் என்கிறார்.

'உயர்ந்தோன் தலைவன் ஒத்தோன் புணரினும்
இழிந்தோள் புணரினும் இழிபுஎனப் படாதே
ஆதலின் யாம்உனைக் காதலித் தனம் ஆல்'

— சிவ சிவ

# இறக்குமதி

தமிழாக்கம் : **கோ. வன்மீகநாதன்**

## 20. உலகமும் நானும்

கல்வியை ஒழித்து எரியுங்கள்,

மனதிற்கு எரிச்சலூட்டுபவை தீர்ந்து விடும்.
''ஆ'' என்பதற்கும் ''அன்று'' என்பதற்கும் இடையில்
எத்தனை வித்தியாசங்கள் இருக்கின்றன?

''நன்மை'' என்பதற்கும் தீமை என்பதற்கும் எத்தனை வித்தியாசம் இருக்கின்றது? மனித சமூகம் எதை அஞ்சுகிறதோ அது உண்மையில் அஞ்சப்பட வேண்டும். ஆனுல், ஐயோ பாவம், அறிவின் உதயம் எத்தனையோ தொலைவில் இருக்கின்றதே!

உலகத்தின் மக்கள் குதூகலமாகக் கொண்டாடி மகிழ்கின்ருர்கள்,
ஒரு சமாராதனை விருந்தில் பங்குகொள்வது போல,
இளவேனிற் காலத்தில் உப்பரிகையின் மீது ஏறி இன்பமுறுவது போல.

நான் மட்டும்தான் மென்மையாய் இருக்கின்றேன்; ஒரு வேலையிலும் அமர்ந்து இல்லாதவன் போல
இன்னும் புன்முறுவல் செய்வதற்கு இயலாத அன்று பிறந்த சிசுவைப் போல,
யாதொடு பற்றுமின்றி வீடு என்று ஒன்று இல்லாததன் போல.

உலகின் மக்களுக்குப் போதுமானது மட்டுமல்ல அதற்கும் மிதமிஞ்சிக் கூட (பொருள்கள்) இருக்கின்றன;
ஆனுல் நானே அவர்களால் புறக்கணித்தவன் போல் இருக்கின்றேன்.
என்னுடைய உள்ளம் ஒரு முட்டாளின் உள்ளம் போல இருக்க வேண்டும்,

குழப்பமுற்றதும் முகிலின் மூடுபனியால் கைக்கு அகப்படாததுமான நெஞ்சமாய் இருக்க வேண்டும் என் நெஞ்சம்!
பாமரர்கள் எல்லா விஷயமும் தெரிந்திருக்கிருர்கள்; ஒள்ளியராய் இருக்கின்ருர்கள்.

நான்மட்டும் தான் புத்தி மழுங்கியவனுகவும் குழப்பமுற்றவனுகவும் இருக்கின்றேன்

பாமர மக்கள் மிகவும் சமர்த்தர்களாயிருக்கிறார்கள், தன்னைப்
பொறுத்தவரையில் உறுதி நெஞ்சம் படைத்தவர்களாயிருக்கிறார்கள்
நானோ தனிமையாய் இருக்கின்றேன், மனச்சோர்வுற்று இருக்கிறேன்.

கடலைப் போல் பொறுமை உடையவனாகவும் அலைக்கழிக்கப்பட்டவனாகவும் பார்ப்பதற்கு யாதும் குறிக்கோள் இல்லாதவன் போலும் இருக்கின்றேன்

உலகத்து மக்கள் அனைவரும் ஏதோ ஒரு குறிக்கோள்
கொண்டிருக்கிறார்கள்
நானோ அடம் பிடிக்கின்றவன் போலவும் பண்பு நயமற்றவனாகவும் அதாவது பாங்கு அற்றவனாகவும் இருக்கின்றேன்.

நான்மட்டும் மற்ற மக்களிலிருந்து மாறுபட்டவனாய் இருக்கின்றேன்
இயற்கை என்ற தாயிடமிருந்து போஷணை பொறுவதை மிகவும் மதிக்கின்றேன்; பேணுகின்றேன்.

---

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

### உடல் உஷ்ணம் குறைய

(அ) நெல்லி வற்றலை தண்ணீர்விட்டு நன்றாக அரைத்துத் தலையில் (Shampoo போல்) தேய்த்துக் குளித்தால், தலையில் உள்ள அழுக்கு நீங்கி உடலுக்குக் குளிர்ச்சியைத் தரும்.

### தலைவலி மயக்கம்

(ஆ) நெல்லிவற்றலை பாலில் அல்லது தண்ணீரில் ஊற வைத்து அரைத்து அதன் விழுதுடன் 2 அரிசி எடை பச்சைக்கற்பூரம் சேர்த்து நெற்றியில் பற்று போட தலைவலி மயக்கம் நிற்கும்.

### சீத பேதிக்கு

(இ) நெல்லிக்காயை கொணர்ந்து கஷாயம் செய்து சாப்பிடச் சீத பேதி குணமாகும்.

### இருமலுக்கு

(எ) வறுத்த கிராம்பு நான்கும் வறுக்காத கிராம்பு நான்கும் வாயில் போட்டுச் சுவைக்க இருமல் குணமாகும்.

டாக்டர் **N. சடையப்பன்.**

ஏற்றுமதி

உ

சிவமயம்

# சிதம்பரச் செய்யுட்கோவை

## A String of verses on Chidambaram

By Kumaragurupara Swamigal.

Translated into English by K, M. Venkataramiah.

60. சேல்செய்த மதர்வேற்கண் சிலைசெய்த கடிகைநுதல்
மால்செய்த குழற்கோதை மகிழ்செய்ய நடஞ்செய்யும்
தருணஇளம் பிறைக்கண்ணித் தாழ்சடை எம்பெருமானின்
கருணைபொழி திருநோக்கில் கனியாத கன்னெஞ்சம்
வாமம்சால் மணிக்கொங்கைக்(கு) ஒசிந்(து) ஒல்கு
மருங்குலவர்
காமம்சால் கடைநோக்கில் கரைந்(து) உருகாநிற்குமால்
அவ்வண்ணம் மாறிநிற்ப(து) அகம்என்றால் அகம்அகம்விட்டு
எவ்வண்ணம் மாறிநிற்ப(து) இன்று.

Her eyes are fishlike, luxurient and dart-like
Her forehead is bow-like and adorned with
"Sudigai"-an ornament;
This Lady with charming curling hair to rejoice,
Dances He the Lord
—who wears young crescent moon as chaplet,
—Who has matted tresses hanging down.
The strong heart that does not melt at His
gracious look,
Becomes tender at the oblique glance of the
damsels

having beautiful breasts and tender waist.
Should it be the trait of the mind to stand changed,
How is it possible for the mind to get rid of sins?

61. அற்புத மணிமன்றில் அடிகள்நின் அடியுன்னார்
மைக்கடல் விடம்என்னும் வடவைத்தீ* எழ அஞ்சி
நொஎன அடிவீழ்ந்தார்க்(கு) உதவிலர் நாணார்கொல்
கைத்தல அபயத்தர் வரதத்தர் கைசெய்யாச்
சித்திரம் அன்ன சிலர்.

At the marvelous jewelled Hall,
O Lord!
Those who do not meditate on your feet,
Hear at the sight of poison that rose
from the sea like submarine fire;
Such celestials are incapable to help those
who prostrate to represent their grief;
Ashamed are they not?
They have the pose of hands,
—one indicative of protection
—and the other the bestowal of boons;
They seem after all carved images not made by hand!

* "Submarine fire in the shape of a mare's head beleived to consume the world at the end of a yuga."

— திருவாரூர் நான்மணி மாலை —

# ஒன்றிய இதயம்

கி. வா. ஜகந்நாதன்

தியாகப்பெருமான் முதலில் திருமாலிடம் இருந்தார். திருமால் சயனக்கோலத்தில் இருந்த போது அவருடைய இதயத்துக்கு மேல் திருமார்பில் அமர்ந்திருந்தார். திருமால் மூச்சை விட்டும் இழுத்தும் படுத்திருந்தபோது அந்த உச்சுவாச நிச்சுவாசத்துக்கு ஏற்றபடி தியாகப்பெருமான் அசைந்தாடினார். அதனால் அவரை இருந்தாடழகர் என்று சொல்வார்கள்.

பிறகு, தியாகேசரை முசுகுந்தன் பெற்று வந்து திருவாரூரில் பிரதிஷ்டை பண்ணினான். திருவாரூரை மண்மகளின் இதயகமலம் என்று சொல்வார்கள். ''மேதினிக், காதல் மங்கை இதய கமலமா, மாதொர் பாகனார் ஆரூர் மலர்ந்ததால்'' என்பது பெரியபுராணம்,

இவற்றையெல்லாம் எண்ணிக் குமரகுருபர முனிவர் ஒரு கருத்தைச் சொல்கிறார்.

தியாகேசர் முன்பு திருமாலின் இதயத்தில் பொருந்தி ஆடினார். இப்போது மண்மகள் இதயமாகிய திருவாரூரில் ஆடுகிறார். திருமாலுக்கு மண்மகள் மனைவி.

முன்பு தமக்கு அன்பராக இணங்கிய திருமாலின் இதயத்திற் பொலிந்தவர் தியாகேசர். அந்தத் திருமால் கடலையே தம் இருப்பிடமாகக் கொண்டவர்.

இணங்குகம லாலயமால் இதயத்தில்
பொலிந்ததியா கேசர்.

அவ்வாறு திருமால் இதயத்திலே பொருந்திய தியாகேசர் இப்போது நாம்எல்லாம் தரிசித்து உய்யும்படி நிலவுலகத்தில் திருவாரூரில் எழுந்தருளி யிருக்கிறார். முன்னை நிலையினும் வேறுபட்ட ஓர் இடத்தில் வந்து தங்கவில்லை. தாம் குடியிருக்கும் இடத்தை மாற்றி வேறிடத்துக்குக் குடி போகிறவர், போகிற இடம் முன்னை இடத்தைப் போலவே வசதியாக இருக்கவேண்டுமென்று விரும்புவர். அத்தகைய இடத்தையே நாடிச்செல்வர்.

தியாகேசர் திருமால் இதய பீடத்தில் எழுந்தருளியவர், தாழ்வான இடத்துக்குச் சென்று தங்குவாரா? வைகுண்டத்தில் அவர் இருந்த திருமாளிகைக்குச் சமமாக இருக்கும் இடம் இந்த நிலவுலகத்தில் எங்கே இருக்கிறது என்று பார்த்தே தேர்ந்தெடுத்துச் சென்று தங்குவார்.

கணவன் தனக்கு ஏற்ற தகுதியை உடைய மனைவியையே தேடிக்கொள்வான். அந்த ஆடவனிடம்சென்று உபசாரம்பெற்ற பெரியவர்கள், அவனுடைய மனைவிக்குரிய இடத்துக்கும் சென்று தங்கி நலம்பெறுவார்கள். கணவன் வீட்டில் தங்கியவர் என்று அறிந்த, மனைவி வீட்டிலுள்ளவர்கள் அந்த உறவுகருதி அவரை அன்புடன் உபசரித்து வரவேற்றுத் தம் இல்லத்தில் தங்கச் செய்வார்கள்.

அத்தகைய நிலையைத் தியாகேசர் பெற்றிருக்கிறாராம். மால் இதயத்தில் பொலிந்த அவர் இப்போது திருமாலின் மனைவியாகிய மண்மகளின் இதயத்தில் வந்து பொலிவு பெற்று வாழ்கிறாராம். அந்த மண்மகள் அழகு நிரம்பியவள். பொன்னாலாகியபல காதணிகளை அணிந்தவள். திருமால் இதய வீட்டில் பார்த்த தேவர்கள் அப்பெருமான் மண்மகள் இதய வீட்டில் பொலிவதைக் கண்டு மகிழ்கிறார்கள். 'இடம் பெயர்ந்து வந்தாலும் பொருத்தமானஇடத்தில் எழுந்தருளியிருக்கிறார்' என்று எண்ணி உவகையடைகிறார்கள்.

அம்பொற்
கணங்குழைமண் மகள் இதய கமலத்தும் பொலிதலின.

திருவாரூருக்குக் கமலாலயம் என்பது ஒரு பெயர். கமலா-திருமகள். அவள் தங்கித் தவம்புரிந்த இடமாதலின் கமலாலயம் ஆயிற்று. கமலா ஆலயம்-கமலாலயம்.

மண்மகளின் இதய கமலம் திருவாரூர் என்ற எண்ணம் ஒரு கால் நமக்கு மறந்துபோனாலும் திருவாரூருக்கு வந்து பார்த்தால் கமலத்தின் நினைவு நமக்கு உடனே எழும். அங்கே பல பூம்பொய்கைகள் உள்ளன. மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூவகைச்சிறப்பும் உடைய திருப்பதி அது. அங்கே உள்ள தடாகங்களில் மணத்தைப் பரப்பிக்கொண்டு தாமரை மலர்கள் விளங்குகின்றன. அவற்றைப் பார்க்கும்போது, 'இந்த ஊரும் மண்மகள் இதயமாகிய கமலம். இந்த ஊரிலுள்ள பொய்கைகளிலும் கமலங்கள். ஒரு கமலத்தில் பல கமலங்கள் அழகுபெறத் தோன்றி மலர்ந்துள்ளன' என்ற எண்ணம் வரும்.

அக் கமலம் மான
மணம் கமழ்பங் கயத்தடம்சூழ் கமலை.

திருவாரூருக்குக் கமலாலயம் என்ற பேர் வந்ததற்குக் காரணம் கமலா ஆகிய திருமகள் தங்கிய ஆலயமாக இருப்பது. ஆனால் வேறுவகையிலும் அந்தப் பெயருக்குப் பொருள் சொல்லும்படியாக அதன் சிறப்பு இருக்கிறது. இத்தனை கமலங்களுக்கு இருப்பிடமாதலாலும் அது கமல ஆலயமாகத் தோன்றுகிறது. மண்மகள் இதய கமலமாக இருப்பதால் கமலாலயம் என்பதற்கு நிலமகளின் இதய கமலமாகிய இடம் என்றும் பொருள் கொள்ளலாம். கமலாலயம் என்றபேர் வாய்த்ததற்கு அப்படி ஒரு பொருள்

கொண்டால், ஒரு சிறப்பான கருத்து நமக்கு விளங்கும். திருமாலின் இதய கமலத்திலிருந்த தியாகேசர் இப்போது அவருடைய தேவியாகிய நிலமகளின் இதய கமலத்தும் எழுந்தருளுகிறார். இந்த இரண்டு நிலைகளையும் சிந்தித்துப் பார்க்கும்போது ஓர் அரிய கருத்துப் புலனாகிறது குமரகுருபர முனிவருக்கு.

கணவன் மனைவியர் கருத்தொருமித்து வாழ்வது முறை. ''எஞ்ஞான்றும், காதல் இருவர் கருத்தொருமித்து ஆதரவு, பட்டதே இன்பம்'' என்று ஔவையார் பாடியிருக்கிறார்.

திருமால்தம் இதய கமலத்தில் தியாகப்பெருமானை வைத்திருந்தார். மண்மகளும் தன் இதய கமலத்தில் வைத்திருக்கிறாள். கணவராகிய திருமால் இதயமும் மனைவியாகிய நிலமகளின் இதயமும் இந்தவகையில் ஒரே இயல்பை உடையனவாக உள்ளன. ''அழகிய பெண்களின் இதயமும் அவர்களுடைய அருளையுடைய கணவரின் இதயமும் ஒன்றுபோலவே இருக்கும்'' என்ற கருத்துஇதனால் தெரிகிறது என்று குமரகுருபரர் கூறி முடிக்கிறார்.

அணங்கனையார் இதயமும்தம்
அருட்கொழுநர்
இதயமும்ஒன்று ஆகும் தானே.

அங்கே கணவராகிய திருமாலின் இதயம் தியாகப்பெருமானுக்கு இடமளித்து; இங்கே நிலமகளின் இதயம் இடமளித்தது. அது கணவர் இதயம்; இது மனைவியின் இதயம்.

இணங்குகம லாலயமால்
இதயத்தில்
பொலிந்ததியா கேசர்
அம்பொற்
கணங்குழைமண் மகள்இதய
கமலத்தும்
பொலிதலின்அக் கமலம்
மான
மணம்கமழ்பங் கயத்தடம்சூழ்
கமலைகம
லாலயப்பேர் வாய்த்த
தால்; மற்று
அணங்கனையார் இதயமும்தம்
அருட்கொழுநர்
இதயமும்ஒன்று ஆகும்
தானே.

+ தாம் இணைந்து வாழும் கடலாகிய இடத்தையுடைய திருமாலின் இதயத்தில் பொருந்தி விளங்கிய தியாகேசர் அழகிய பொன்னாலாகிய திரண்ட காதணியையுடைய நிலமகளுடைய இதயமாகிய திருவாரூரிலும் நித்தியவாசம் செய்து விளங்குவதால், அந்த இதய கமலத்தைப் போல மணம் கமழும் தாமரைகள் உள்ள தடாகங்கள் சூழ்ந்ததிருவாரூர், கமலாலயம் என்றதிருநாமத்தை வாய்க்கப்பெற்றது; தெய்வத்தைப் போன்ற கற்புடைமகளிரின் இதயமும் அவர்களுடைய அருளையுடைய கணவர்களின் இதயமும் ஒன்றாகவே இருக்கும். +

[கமல ஆலய மால்-நீரைத் தன் இடமாகக் கொண்ட திருமால்; கமலம் - நீர்; இங்கே கடலைக் குறித்தது; இஃது ஆகுபெயர்.

அம்பொற் கணம் குழை- அழகிய பொன்னுலாகிய திரண்ட காதணி; காதணியில் பல உறுப்புக்கள் உண்டாதலின் கணங் குழை என்றார். பூமிக்கு ஏற்றபடி, அழகிய பொன்னையும், திரட்சியாகிய மரத்தழைகளையும் கொண்ட மண்மகள் என்ற பொருளும் தொனித்தது. 'அழகிய பொன்னின் தொகுதியையும் தனிக் கனையும் தன்பால் உடைய பூமிதேவி; குழை, இங்கே மரஞ் செடி கொடிகளுக்கு ஆகுபெயராய் நின்றதாகக் கொண்டு, தன் அகத்தே பொற் புதையல்களையும் புறத்தே தாவரங்களையும் உடையவளென்று கொள்க' என்று ஐயரவர்கள் விளக்கியுள்ளார்கள்.

அக்கமலம்மான - அந்த இதய கமலத்தைஒப்ப. 'அணங்கனையார் இதயமும் தம் அடுட்கொழுநர் இதயமும் ஒன்றுகுந்தானே' என்றது வேற்றுப் பொருள் வைப்பணி. மற்று: அசை.

அணங்கனையார் -கற்பின் சிறப்பால் தெய்வம் போல மதிக்கப் பெறுகிறவர்கள்; அணங்கு - பெண்தெய்வம். தம் மனைவியருக்கு மீதூர்ந்த அன்பைப் பொழிதலின் அடுட்கொழுநர் ஆயினர். தான், ஏ: அசை நிலைகள்.]

இந்தச் செய்யுள் திருவாரூர் நான்மணிமாலையில் 8-ஆவது பாடலாக உள்ளது.

# நூல் நிறை

## திருக்குறள்—ஒரு பொதுமறை

[ஆசிரியர்: திருவாசகச் செல்வர் திரு. கோ. வன்மீகநாதன். வெளியீடு: ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள். பக்கங்கள் 6+68. விலை ரூபா. 3—00. கிடைக்குமிடங்கள்; 1. தலைமையாசிரியர், S K. S. D. S. மேனிலைப்பள்ளி, திருப்பனந்தாள். 2. நிர்வாக ஆசிரியர், ஸ்ரீ குமரகுருபரர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள். அ. கு. எ. 612 504.]

ஆறு அதிகாரங்களைக் கொண்ட இந்த நூல் சிந்தனை ஆறாக விளங்குகிறது. திருக்குறள் சைவ இலக்கியமே என்று இந்நூல் மெய்ப்பிக்கிறது. (பக்கம் 1.) புதிய கண்டுபிடிப்புக்களை உடையது: 1, 2, 3, 4. பாயிரம், 5, 6, 7 அதிகாரங்கள் அதிகாரிகளை நியமிப்பது; 8 ஆவது அன்புடைமை அதிகாரமே திருக்குறளின் தொடக்கம் (பக்கம் 30.) திருக்குறள் அறத்துப்பாலை இந்நூல் முற்றிலும் சுற்றி வருகிறது. அனைவரும் படித்தறிய வேண்டிய செய்திகள் பல உள்ளன. இந்நூலின் விற்பனைத்தொகை திருப்பனந்தாளில் உள்ள S.K S.D.S மேனிலைப்பள்ளியைச் சாரும்.

## திருநீற்றுப் பதிகம் - சிற்றுரை

[சிற்றுரை ஆசிரியர்; திரு. மு. இரத்தின தேசிகர். வெளியீடு; ஸ்ரீசிவாக்ர யோகிகள் ஆதீனம், சூரியனார் கோயில், தஞ்சை மா! வட்டம். பக்கம் 30. இலவச வெளியீடு.]

ஆதீன வரலாறு, திருநீறு, திருநீற்றுப் பதிகம் எழுந்தது எப்படி என்ற கட்டுரைகளுடன் பதிகமூலமும் உரையும் உள்ளது. சிற்றுரை என்று நூற்பெயர் இருப்பினும் பொழிப்புரை விளக்க உரைகள் உள்ளன. சைவ அன்பர்கள் அவசியம் படிக்க வேண்டிய அரிய நூல்.

## திருக்களிற்றுப்படியார்

[தெளிவுரை: திரு. கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., வெளியீடு; ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள். பக்கங்கள் 22+74. விலை ரூ. 1–25. கிடைக்குமிடம்: நிர்வாக ஆசிரியர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் அ. கு. எ. 612 504.]

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் 20 ஆவது அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்களின் நினைவு மகேஸ்வரபூஜைத் திருநாள் (19—5—80) வெளியீடாகத் தற்போது பட்டத்தை அலங்கரித் தருளும் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களால் வெளியிடப் பெற்றது. ஸ்ரீ குமரகுருபரர் இதழில் தொடர்ந்து வெளி வந்த தெளிவுரையுடன் 16 பக்க அளவில் நீண்ட முன்னுரையுடன் சேர்த்து வெளியிடப் பெற்றுள்ளது. இதன் விற்பனைத்தொகை ஸ்ரீ குமரகுருபரர் இதழ் வளர்ச்சி நிதியைச் சாரும். பொழிப்புரை, விளக்கவுரை ஆகியவை மூலத்தின் மேன்மையை நன்கு தெளிவு செய் வன. நூலாசிரியர் வரலாறு, நூற்பெயர்க் காரணம், நுவல்பொருள், ஒப்புமைகள் அணிகள் ஆகியன முன்னுரையுள் குறிக்கப் பெற்றுள் ளன. நான்கு அச்சகங்களில் பல்வேறு காலங்களில் அச்சிடப்பெற்ற மையின் அச்சுக் 'கலைப்பிழைகள்' உள்ளன. உரைச்சிறப்பும் அச்சுப் பிழை இன்மையும் கருதத்தக்கன.

## வரலாற்றுப் போக்கில் பழையாறை மாநகர்

[ஆசிரியர் : திரு. வே. மகாதேவன் எம். ஏ., வெளியீடு : அன்ன பூர்ணு பதிப்பகம், திருப்பனந்தாள். பக்கங்கள் 8+140 விலை ரூ. 6-00 கிடைக்குமிடம் : ம. வே. சுவாமிநாதன், அன்னபூர்ணு பதிப்பகம், 103, வடக்கு வீதி, சிதம்பரம் – 608 001. தெ. ஆ. மாவட்டம்.]

ஒருகாலத்தில் சோழப் பேரரசின் தலைநகரமாக இருந்த பழை யாறை மாநகர் பற்றிய வரலாறு இந்நூலுள் உள்ளது. இதுவரை இந்தவரலாறு தொகுக்கப்பெற்றதில்லை; முழுமையாக ஆராயப்பெற்ற தில்லை! பதினெட்டுப் பெருங்கோயில்களைக் கொண்டிருந்த பெருநகரம் பழையாறை!—இச்செய்தியை அறியும்போது நாம் பிரமிக்கிறோம். அங்கிருந்த வரலாற்று நாயகர்களின்——அரசு அதிகாரிகளின் திறமை களைப்பற்றிப் படிக்கும்போது நாம் உற்சாகம் அடைகிறோம். வரலாற் றுலகின் நல் வரவேற்புக்குரிய நூலாகும் இது. பெங்களூர் திரு ம.வே. ஜெயராமன் அவர்களே இந்நூல் வெளிவர முழுமையான காரணமாவார்.

## கொடிக்கவியும் வினவெண்பாவும்

[தெளிவுரை ஆசிரியர் : திரு. கு. சுந்தரமூர்த்தி எம் ஏ. வெளியீடு: ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள். பக்கங்கள் 12+14 விலை ரூ. 0-75 கிடைக்குமிடம்: நிர்வாக ஆசிரியர், ஸ்ரீ குமரகுருபரர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.]

உமாபதி சிவம் அருளிய கொடிக்கவி விஞவெண்பா என்னும் இருசிறு நூல்களின் விளக்கவுரையுடன் கூடியது. ஆராய்ச்சி முன்னுரை நூல்களை நன்கு அறிமுகம் செய்கிறது. பெங்களூர் அன்பர் திரு. எம். வி. ஜெயராமன் அவர்களின் நிதியளிப்பினின்றும் வெளி வந்தது. எளிதின் கற்றுப் பயன்பெற ஏற்ற வெளியீடு.

## மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ்
## கருத்தரங்கக் கட்டுரைகள்

[ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் 292 ஆவது மகேஸ்வர பூஜை வெளியீடு: ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள். பக்கங்கள் 74. விலை ரூ. 3. இதன் விற்பனைத்தொகை திருப்பனந்தாளில் உள்ள ஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் மேனிலைப்பள்ளி வளர்ச்சி நிதியைச் சாரும் ]

ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் 291 ஆவது மகேஸ்வரபூஜைத் திருநாளில் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் பற்றி ஒரு கருத்தரங்கம் நிகழ்ந்தது. அதில் பங்குபற்றிய அறிஞர் பெருமக்களின் கருத்துரைகளை அவர்களிடம் கட்டுரையாகப்பெற்று 292 ஆவது மகேஸ்வர பூஜை வெளியீடாக ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களின் அருளாணையின் வண்ணம் வெளியிடப் பெற்றது.

தலைமையுரை: திரு கம்பன் அடிப்பொடி அவர்கள். கட்டுரையாசிரியர்கள்: திரு. கா.ம. வேங்கடராமையா, மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார், திரு. க. வச்சிரவேல் முதலியார், வாகீசகலாநிதி திரு. கி. வா. ஜ. மகாவித்துவான் திரு. ச. தண்டபாணிதேசிகர் ஆகியோர். பெங்களூர் அன்பர் திரு, ம. வே. ஜெயராமன் அவர்களின் நிதியளிப்பில் வெளியிடப்பெற்றது.

எளிய இனிய அரிய கட்டுரைகள் நிறைந்த வெளியீடு. இலக்கிய இலக்கண சாஸ்திரக் கருத்துக்கள் செறிந்த வெளியீடு. பேரறிஞர்களின் கட்டுரைகள் ஒருசேர உள்ளன.

அனைவரும் அவசியம் வாங்கிப் படித்துப் பயன்பெற வேண்டியதாகும்.

# விடையரங்கம்

**வினா:-**

திருச்செந்தூர் முருகப்பெருமான் அருள்பெற்ற ஸ்ரீ குமரகுருபர அடிகள் அம்முருகப் பெருமானைப்பாடியே, ''இந்துஸ்தானியை'' அறிந்திருக்கலாமே. அப்படியின்றிக் கலைமகளைப் பாடி அறிய வேண்டியிருந்ததன் காரணம் என்ன?

—கி. இராசவேல், காஞ்சிபுரம்.

**விடை:-**

திருச்சிவபுரம் — திருஞானசம்பந்தர் தேவாரம்—''சினமலியறுபகை'' என்று தொடங்குவது — அதில் சிவபுரம் நினைபவர் ''கலைமகள் தர நிகழ்வரே'' என்று உள்ளது. இதனால் இறைவனை வழிபடும் அடியார்களுக்குக் கலைமகள் மெய்யறிவு கொடுப்பள்; அம் மெய்யறிவுடன் அன்னோர் திகழ்வர் எனத் தெரிகிறது. எனவே மெய்யறிவு கொடுப்பவள் கலைமகளாதல் பெறப்படும். ஆகவே ஸ்ரீ குமரகுருபரர் இந்துத்தானி மொழியறிவு பெறக் கலைமகளை—சகலகலாவல்லியைப் பாடிப் பரவினர் என்க.

—கா. ம. வேங்கடராமையா
M.A .B.O L

**வினா:-**

''பிரதோஷம்—மகாப்பிரதோஷம்'' இவற்றின் சொற்பொருள், வரலாறு ஆகியவற்றைக் குறிப்பிடுக. அப்பொழுதுகளில் நாம் ஆற்ற வேண்டிய பணிகள் யாவை?

—கி. இராசவேல், காஞ்சீபுரம்.

**விடை:-**

இதற்கு விடை ஆறுமுக நாவலர் இரண்டாம் சைவ வினு விடை, காஞ்சீபுரம் சபாபதி முதலியாரது சைவ சமய விளக்க வினு விடை - இந்நூல்களில் எளிதாகக் காணலாம். எனினும், அவைகளில் 'பிரதோஷம்' என்பதற்குச் சொற்பொருள் கூறப்படவில்லை. 'குறிப்பிட்ட ஒரு நேரத்திற்கே அது பெயர்' என்று மட்டுமே குறிப்பிடப் படுகின்றது. 'இந்த நேரத்தில் சிவாலயத்தில் சோம சூத்திரப் பிரதட்சிணம் செய்தல் இன்றியமையாதது' — எனக்கூறி அதனைச் செய்ய வேண்டிய முறையும் விளக்கப்பட்டுள்ளது. அவைகளை எல்லாம் இங்கு முற்ற எடுத்தெழுதுதல் இயலாது.

''ஏகாதசி திதியில் சிவபெருமானைத் தேவர்கள் நஞ்சுண்ணச் செய்தனர். அதனால் அன்று முழுவதும் அவர்கள் பட்டினி இருந்து துவாதசியில் பாரணம் செய்தனர்.'' திரயோதசியில் பகல் இறுதி மூன்றே முக்கால் நாழிகை தொடங்கிச் சிவபெருமான், 'தான் நஞ்சு உண்டதனால் தீங்கு எதனையும் எய்தவில்லை என்று தேவிக்கு உணர்த்த ஒரு சாம

நேரம் சூலத்தைச் சுழற்றிக் கொண்டு வீரநடனம் புரிந்தான். அதனைத் தேவர்களும் தரிசித்துத் தாம் அவனை நஞ்சு உண்பித்த குற்றத்தினின்றும் நீங்கினர்' அத ஞல் அந்த வேளையில் சிவாலய தரிசனத்தை யாவரும் தவருது செய்தல் வேண்டும் என்பது மர பாகச் சொல்லப்பட்டு வருகின்ற ஒன்று. இதில் சிறிது பகுதி, மேற் குறித்த சைவ சமய விளக்க விஞ விடையில் காணப்படுகின்றன.

தேவர்கள் 'தோஷத்தினின்று நீங்கிய காலம்' என்பது சுருக்க மாக 'பிரதோஷ காலம்' எனப் படுகின்றது போலும்!

— மகாவித்துவான்

சி. அருணைவடிவேல் முதலியார்

**விஞ:-**

'குன்ருத புகழாளர் களந்தை வேந்தர்' எனத் தொடங்கும் பெரிய புராணப் பாடலில் வரும் 'களந்தை' என்பது கூற்றுவ நாய ஞர் அரசாண்டு முத்தி பெற்ற இடமா? அவ்வாறில்லையாயின் கூற்றுவ நாயஞர் அரசாண்டு, அருந்தொண்டுகளாற்றி முத்தி பெற்ற இடம் எது?

— கே. ஜி. அருணுசலம், களத்தூர்

**விடை:-**

இதற்குரிய விடை, திரு. C K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் பெரிய புராண உரையிலும், தருமையாதீனத்து ஒன்பதாந்திரு முறைவெளியீட்டில் திரு. சுந்தரேச வாண்டையார் அவர்கள் ஆராய்ச்சிக் குறிப்பிலும் தெளிவாகக் காணப் படுகிறது.

''தொண்டை நாட்டில் செங் கற்பட்டிற்கு அருகில் உள்ள பொன்விளைந்த களத்தூரே கூற் றுவ நாயஞர் இருந்து அரசுபுரிந்த களந்தை என்பாரும் உளர்; அது பொருந்தாது. சோழநாட் டில் திருத்துறைப்பூண்டிக்கு அரு கில் உள்ள 'களப்பாள்' (களப் பாழ்) என்பதே அவர் அர சிருந்த ஊர்; அங்குள்ள 'அழ கியநாத சுவாமி கோயில்' என் னும் சிவாலயமே 'களந்தை ஆதித்தேச்சரம்' எனத் திரு விசைப்பாவில் பாடப்பெற்றது. என்பதே மேற்கண்டவற்றிலுள்ள செய்திகளின் சுருக்கம்.

— மகாவித்துவான்

சி. அருணைவடிவேல் முதலியார்

**விஞ:-**

'ஆகமம்' என்பதன் பொருள் யாது? அவை யாவை? அவை எவைகளைப் பற்றி இயம்பு கின்றன?

— கி. இராசவேல், காஞ்சீபுரம்

**விடை:-**

ஆகமம் என்பது வடமொழிச் சொல்; தொன்றுதொட்டு வரு வது என்பது அதன்பொருள். அவை சைவ ஆகமம், வைணவ ஆகமம், பௌத்த ஆகமம் முத லியன. (தற்காலத்தில் கிறித்துவ வேதமான விவிலியத்தின் Old Testament, New Testament என் பனவற்றை பழைய ஆகமம்,

புதிய ஆகமம் என்றும் கூறுகின்றனர்.) ஆலயம், மூர்த்தி, வழிபாடு, மந்திரம், தந்திரம் முதலியவற்றைப் பற்றிய இலக்கணங்களையும் செயல்முறைகளையும், விளக்கிக் கூறி வழிகாட்டுபவை ஆகமங்களே!

ஆகமங்கள் பெரும்பாலும், கிரியாபாகம், சரியாபாகம், யோகபாகம், ஞானபாகம் என நான்கு பகுதிகளை உடையன.

**சைவ ஆகமங்களில்:**

1. கிரியா பாகம்:- சிவச்சின்னங்கள் தரித்தல், சிவாலயம் சேர்தல், சிவதரிசனம் செய்தல், சிவதீட்சை பெறுதல், மந்திர ஜபம் செய்தல், சிவப்பிரசாதங்கள் அடுந்தல் ஆகிய சைவ அறம் பற்றிக் கூறும்.

2. சரியா பாகம்;- திருவிழாக்கள், மூர்த்தி பேதம், வழிபடத்தக்கவை, தகாதவை, பிரதிஷ்டை நியாசம், முதலியவற்றைப் பற்றிச் பேசும்.

3. யோக பாகம்:- இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, சமாதி ஆகிய யோகங்கள் பற்றி மொழியும்.

4. ஞான பாகம்:- பதி, பசு, பாசம் ஆகியவற்றை விளக்கும்.

சைவ ஆகமங்கள் 28, அவை யாவன:- காமிகம், காரணம், சுப்ரபேதம், ரௌரவம், வாதுளம், யோகசம், சிந்தியம், அசிதம், தீப்தம், சூக்ஷ்மம், சகஸ்ரம், அஞ்சுமான், விஜயம், நிஸ்வாசம், ஸ்வாயம்புவம் ஆக்னேயம், வீரம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோத்கீதம், லளிதம், சித்தம், சந்தானம் சர்வோக்தம், பாரமேச்வரம், கிரணம்.

இவற்றுள் முதல் ஐந்தும் அச்சாகியுள்ளன. வைணவ ஆகமங்கள் 2, அவையாவன:- பாஞ்சராத்ரம், வைகானசம்.

பௌத்த ஆகமங்கள் 3, அவற்றைத் திரிபிடகம் என்பர். அவை யாவன;-

சூத்ர பிடகம், வினய பிடகம், அபிர்தம பிடகம்.

— கம்பன் அடிப்பொடி.

---

## உத்தரசுவாமிமலை

டெல்லி உத்தரசுவாமிமலை நூதன திருப்பணிகளுக்குக் காணிக்கைகள் அனுப்பவேண்டிய முகவரி ;-

செயலாளர், ஸ்ரீ சுவாமிநாதசுவாமி சிவசமாஜம்,
இராமகிருஷ்ணபுரம், புது டெல்லி.

# சிவந்த கால்கள்

நெல்லை சிவமணி புலவர், **ம. சிவசம்பு** பி. லிட்.,

அடியவர்கள் இறைவன் திருவடியை இடைவிடாது தியானம் செய்து கொண்டிருப்பவர்கள். கோயில் சென்று அவன் திருமேனி கண்டு திருவடிஇன்பத்தில் தோய்பவர்கள். ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நாள்தோறும் தில்லைக் கூத்தனைக் கண்டு தெரிசிப்பார்கள். அவன் குஞ்சிதபாதம் கண்டு மகிழ்வார். ஒருநாள் குஞ்சிதபாதம் சிவந்திருப்பதைக் கண்டார். அவரையும் அறியாமல் கண்ணில் கண்ணீர் மல்கியது. தாரைதாரையாக வழிந்தது. ஓகோ! நான் கெட்டேன் என்று வாய்விட்டுக் கதறிவிட்டார். பின்பு சற்று நிதானம் அடைந்தார். எப்பொழுதும் ஊன்றிய திருவடி சிவந்திருக்கும். நாள்தோறும் பார்த்துப் பழகியதுதான்! இன்று தூக்கிய திருவடி சிவந்திருக்கிறதே! என்ன காரணம்? சிவகாமி இறைவன் திருவடி ஆடிக் களைத்து விட்டதே என்று பிடித்துவிட்டிருப்பாளா? அதனுல் சிவந்திருக்குமோ? சிவகாமியின் கைகள் தளிர்போன்று மென்மையானவை ஆயிற்றே. அவை சிவக்கும்படிச் செய்யா! வேறு என்ன காரணமாக இருக்கும். இத்தேவர்களுக்கு அறிவே கிடையாது. தன் வலிய தலையைக்கொண்டு அவன் மென்மையான திருவடியில் வைத்து எம்பிரான்! எம்பிரான்! என்று வணங்கி இருப்பார்கள். அதனுல்தான் முப்புரங்களையும் பொடியாக்கும் பொருட்டு நகைத்த தில்லைக்கூத்தன் திருவடிகள் சிவந்திருக்கும் என்று முடிவு கட்டுகிருர்.

நடிக்கச் சிவந்ததும் அன்று
எம்பிராட்டி நறுந்தளிர்க்கை
பிடிக்கச் சிவந்ததும் அன்றுகொல்
எம்பிரான் என்று உம்பர்
முடிக்கச் சிவந்தன போலுங்
கெட்டேன் புரமூன்றும் அன்று
பொடிக்கச் சிவந்த நகைத்தில்லை
யான் மலர் பூங்கழலே.

—சிதம்பரமும்மணிக்கோவை - 31

உம்பர் — தேவர்

''தேவரெலாம் தொழச் சிவந்த
செந்தாள்''

என்று கூறுகிருர் தாயுமான சுவாமிகளும். சிவந்த திருவடிகளை நாமும் தொழுது இன்பம் அடைவோம்,

# திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பாவந்தாதி

ஆசிரியர்: வித்துவான் தியாகராச செட்டியார்

பழியஞ்சி யென்றொருபேர் பண்டுகொண்டா யன்பர்
வழியஞ்சி யஞ்சிக்கால் வைத்துக் — குழியஞ்சி
யாழப் புரிந்துபழிக் கஞ்சா னெனும்பழியின்
மூழ்கலொற்றி யாய்முறையா மோ. 86

மோலிமுடி சூடி முறைநிறுவி ஞயரசாய்
நீலி யிடத்துவைத்த நின்மலா — சூலி
திருமுன் முறையிடுன் செஞ்செவியே லாமை
தருமமோ வாரூரத் தா. 87

தாங்குமிமி லேறுச் சரமாத் துவசமா
விங்கு முலைமனையா வெம்பணியிற் — றாங்கு
மொருவனைக்கொ ளொற்றி யுடையாய்நா யேனை
மருவடிமை யாக்கொள்ளு வாய். 88

வாரார் கயிலை மலையோ மறைமுடியோ
வேரார்பூங் கோயிலோ வென்னுளமோ — சீராரூர்த்
தம்பிரான் கங்கைச் சடையான்பூங் கொன்றையணி
யெம்பிரான் வாழு மிடம். 89

இடங்காவல் பூண்டாளுக் கெந்தாய்நின் சென்னி
மடங்காத காதலொடு வைகுந் — தடங்கொங்கை
மின்னையஞ் சொல்லேன் விளங்கொற்றி யூர்நம்பா
பின்னை தெனக்கருள்வாய் பேசு. 90

பேசேனீ யன்றிப் பிறதெய்வ முண்டென்று
கூசே னினையென்றுங் கும்பிடுவே — னேசேன்
பலியேற்று யென்றூரர்ப் பண்ணவா நோயா
னலிவோட் டுவதெந்த நாள். 91

நாளே வினையே நமனே நவக்கோளே
கோளே புரியவெனைக் கூடன்மின் — ருளே
யெனக்களித்தா ஞெற்றியூ ரெம்பிரா னென்புன்
மனக்குளிருப் பானென்றும் வந்து. 92

வந்தேன் றிருமுன் மகிழ்ந்துபணிந் தேனமுதே
செந்தேனே கற்கண்டே சீனியே — நொந்தேனைக்
காவென்றே ஞரூர்முக் கண்ணு வருளாது
போவென்ரு லன்றே புகழ். 93

புகழ்ச்சிவிருப் பில்லார் புவனத்தில் யாரே
யிகழ்ச்சிவிருப் புள்ளா ரெவரே — புகழ்ச்சி
விரும்பினையே லெற்கா விமலாதென் ஞெற்றிக்
கரும்பினைநேர் சொல்லாள்பா கா. 94

பாகங் கலந்தமலைப் பாவையாய் பாவைமார்
மோகங் கலந்தமுழு மூடனேன் — ரேகங்
கலந்தபிணி நின்னருண்முன் கான்முன்றுய் யன்ரே
நலந்தழையு மாரூரண் ணு. 95

அண்ணுதென் ஞெற்றியூ ராண்டவா செந்தமிழாற்
பண்ணுர் கவிபாடிப் பாவலர்க — ணண்ணு
விரக்கிலெதிர் பேசாதொன் றீயா திருந்தாற்
புரக்கும்வள்ளற் கீதொருபண் போ. 96

போதன் பணிபாதன் புண்ணியன் றென்கமலை
நாதன் திருநாவ ணுவலர்க்குத் — தூதன்
கலங்குமெளி யேற்கருளாக் காரணமென் னந்தோ
துலங்கு மருளைச் சுமந்து. 97

சுமந்தா யருளைச் சுடுநோய்தொல் லைக்காய்
கமந்தா னிதுவோ கழருய் — நமன்ரு
ஹுருளவுதைத் தாயொற்றி யூரா யுலகு
மருளவதெங் குக்கொட்டு வாய். 98

வாயாரப் பாடி மனநெகிழச் சிந்தித்து
நோயாலந் தோவின்னு நோவேனே — தீயாரைப்
பாடிப் பரிசுபெருப் பாவியோ யான்மன்றத்
தாடிமகி ழுங்கமலை யாய். 99

ஆய்ந்தவன்பர் கூடிக்கூத் தாடிப்பே ரானந்தந்
தோய்ந்துமகி ழொற்றியூர்த் தொன்னகரில் — வாய்ந்தபர
னார்ந்தபுகழ் பாடு மறிஞரில்லந் தோறுமென்றுஞ்
சேர்ந்து மகிழுந் திரு. 100

திருச்சிற்றம்பலம்.

## சிறப்புப் பாயிரம்.

திருக்கமலை யொடுமொற்றித் திருநகர்வா
முருட்செல்வத் தியாகே சன்றோண்
டருக்கமலை யிரந்தளித்தோ னருக்கமலை
யணிவேணி யண்ணன் மீதே
இருக்கமலைச் சிரகிரிவாழ் தியாகரா
சக்கவிஞ னெம்ம னோர்தம்
வருக்கமலை வறவன்பின் முதற்பாவந்
தாதியொன்று வகுத்தான் மன்னோ.

ஆரூரி னொடுமொற்றித் திருநகரிற்
புற்றிடங்கொண் டமர்ந்தே யாழித்
தேரூருந் தியாகேச னிருந்தாடுஞ்
செயற்கேதுத் தெரியி னிந்த
ஏரூரும் புகழ்த்தியாக ராசநா
வலனன்பி னியம்பு செப்பற்
சீரூரு மின்றுதினை முனமறிந்த
மகிழ்வென்று செப்ப லாமால்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

# கந்தர் கலிவெண்பாவுள் சமயம்

— மு. அருணுசலம் —

## II. புறச் சமயம்

நாத்திக சமயங்களுக்கு மாருக, புறச்சமயங்கள் வேதத்தை ஒப்புக் கொள்கின்றன. ஆனுல் சிவபெருமானேயும் சிவாகமங்களேயும் ஒப்புக் கொள்வதில்லே. ஆகவே இவை புறம்பான சமயங்கள், புறச்சமயங் கள். முன் சொன்னபடி இவை தருக்கம் முதலான ஆறு. இவற்றில் சில உட்பிரிவுகளும் சொல்லப்படும்.

### 1. தருக்கம்

தருக்கம் என்பது புறச் சமயங்களுள் முதலாவதான தனிச்சமயம். இது வைசேடிகம் நையாயிகம் என இருவகை. இவ்விரண்டின் இயல்புகள் வெவ்வேறு.

#### வைசேடிகம்

இது திரவியம் குணம் தொழில் சாதி விசேடம் சமவாயம் இன்மை என ஏழு பதார்த்தங்களேக் கூறும். ஆன்மாக்கள் வியாபகமாய் என்ணிறந்தன. மனம் அணு அளவாய் ஆன்மாக்கள் தோறும் வெவ் வேருய் இருக்கும். பரமான்மா, சீவான்மா என இருவகை. பர மான்மா, முற்றுணர்வுடையவன். அவன் இச்சையால் உலகம் தோன்றி ஒடுங்கும். வேதம் அவன் செய்தது. சீவான்மா சிற்றறி வுடையது. மனத்தோடு கூடினுல்தான் அறிவு. ஏழுவகைப் பொருள் களின் இயல்புகளே உணரவே ஆன்ம இயல்பு விளங்கும். உடம்பு நானல்ல என்பது விளங்கும். அறம் பாவம் இல்லேயாயின் பிறவியும் ஒழியும். விணப்பயன் கழிய, மனத்தின் கூட்டம் நிகழாமையால் அறிவின்றிப் பாடாணம் போற்கிடப்பதே முத்தி. புருடனேயும் பிர கிருதியையும் கூட்டுவது நியதி. நியதி பிரமத்து இயல்பு. இதை அறிவதே வைசேடிகம்.

#### நையாயிகம்

வைசேடிகத்தைச் சிறுபான்மை வேறுபடுத்துக் கூறுவது நையா யிகம். நியாயத்திலிருந்து வந்தது நையாயிகம். இதைச் செய்தவர்

கௌதமர்; அக்கபாதர் என்றும் பெயர் பெறுவார். தருக்கவாதமன்றி வேறு அறியும் அறிவு இல்லை. கிரியாஞான சமவாயமே முத்திநிலை. இவை நையாயிகர் மதம். வேதமே தெய்வம் என்பது.

இவ்விருவரும் தார்க்கிகர் எனப்படுவர். தார்க்கிகருக்கும் பௌத்தருக்கும் ஒற்றுமை நிரம்ப உண்டு. இவர்கள் வேதநெறியில் ஒழுகி, வேதத்திற்குப் பிரமாணம் கொள்ளுவதால் நாத்திகராகக் கொள்ளாது, இங்கு தனியே வைத்து எண்ணப்பட்டனர். நையாயிக நூலிற்கூறும் தருக்கம் பொதுவாக எல்லாச்சமயநூல் ஆராய்ச்சிக்கும் உபகாரமாம். தார்க்கிகர் ஆரம்ப வாதிகள் எனவும் சொல்லப்படுவர்.

## 2. மீமாம்சை

இது பூர்வ மீமாம்சை; வேதத்தின் கரும காண்ட ஆராய்ச்சி செய்வதற்கு எழுந்த நூல். இது பற்றி, இதுவும் வேதம் எனப்படும். இதைப் பன்னிரண்டு அத்தியாயமாகச் சைமினி முனிவர் செய்தார். வேதம், அநாதி, சுயம்பு. வேதத்திலும் தொழிற்படுத்தும் அல்லது விதிக்கும் சொற்களே பிரமாணம், விதிவாக்கியம் அல்லாதனவும் உபகாரம் ஆதல் பற்றிக் கொள்ளப்படும்.

இம்மீமாம்சை நூல் இருவகைப்பட்டது. இதற்குச் சபரமுனி பாடியம் செய்தான். சூத்திரத்திற்கும் பாடியத்திற்கும் சிறு பான்மை வேறு பாடுண்டு. பட்டாசாரியன் என்பவர் சூத்திரத்தை ஒட்டி வழி நூல் செய்தார். அவருடைய மாணாக்கரான பிரபாகரன் பாடிய மதம் பற்றி வழிநூல் செய்தார். இவ்வாறு மீமாம்சை இரண்டு பிரிவு ஆகிவிட்டது.

### பட்டாசாரிய மதம்

பாட்டம் என்பதும் இதுவே. வேதம் அநாதி ஆகவே கர்த்தா, அருவம், அதுவேமுதல். ஆன்மா பிரபஞ்சமெங்கும் ஒன்றாய் நிறைந்து நிற்கும். யாகங்கள் செய்தலால் அவை யாககன்மங்களும் மனுதி கரண ஞரணங்களுமாகிய ஞானமும் இரண்டுகாலாக முத்தியை உண்டாக்கும். வினைகெட்டு உயிரில் கூடும் அதாவது கன்மமே பயன் கொடுக்கும். முத்தியில் நையாயிகர் போல ஆனந்தம் உண்டு என்று இவர் கொள்வர்.

### பிரபாகர மதம்

கன்ம நாசத்தில் அபூர்வம் என்று ஒன்று தோன்றிப் பாடாணம் போற்கிடப்பதே முத்தி என்றும் கூறும். யாகங்கள் பலன் கொடுக்கும்.

பலன் மாருது பிறப்பு இறப்புத்தரும், ஆகவே, யாகத்தையும் விட்டு, தொழிலே விடவேண்டும். அறிவு அசைதலும் தொழிலாதலால், சர்வநினைவும் அற்றுப் பாடாணம்போற் கிடப்பதே முத்தி என்பதும் இம்மதத்தார் கருத்து.

மீமாம்சையில் கூறும் நியாயங்கள் பொதுவாக எல்லாச் சமய நூல் ஆராய்ச்சிக்கும் உபகாரப்படுவது.

## 3. ஏகான்ம வாதம்

இது அத்வைதமாகிய ஏகம் என்ற ஒரேகொள்கையை உடையது. அதாவது பிரமம் ஒன்றே உள்பொருள். மற்றவை யாவும் மாயை என்ற பொதுவான மாயாவாதமே இதன் கருத்து. இது நான்கு வகையாகக் கருதப்படும். மாயாவாதம், பாற்கரிய வாதம், கிரீடாப் பிரமவாதம், சத்தப்பிரமவாதம் என. இந்த நால்வேறு வகைப்பட்ட ஏகான்மவாத நூலே வியாச முனிவர் செய்தார் என்பது வழக்கு.

### மாயாவாதம்

சச்சிதானந்தமாய் நித்தமாய் வியாபகமாய் நிற்பது பிரமம் ஒன்றே. அதுவே மெய்ப்பொருள் - ஏனைய வெல்லாம் அவிச்சை ஆதலால் பொய்மாயை; பிரமம்போல சத்துமன்றி, முயற்கோடுபோல அசத்துமன்றி, இருப்பது. இது சொல்லொணுதது. இந்த மாயைக்கு வேருகிய பிரமசொரூபமே யான் என்று வேதாந்தத்தால் அறிவதே முத்தி.

### பாற்கரிய வாதம்

முன் கூறப்பட்டபடி பிரமமே சடமும் சித்துமாகிய உலகங்க ளாய்ப் பரிணமித்தது. பந்தத்தின் காரணமாய் அவ்வாறு பரிண மித்து விகாரப்பட்ட பரிணமத்தை அறியாமை. வேதாந்த ஞானத் தால் ஆன்மரூபம் உடம்பின் வேருனது என்ற உணர்வும் உண்டாகி அது விளங்கும். அதுவே பிரம்மம் என்றறிந்து அதன் கண் இலயித் தலே முத்தி. இம்மதம் செய்தவர் பரிங்கரர். காலம் கி. பி. 1000.

### சத்தப்பிரமவாதம்

காரணமாகிய பரபிரமம் இறுதிக் காலத்தில் சத்தவடிவுடைய தாய் இருக்கும். அது அவிச்சையினுல் சடமும் சித்துமாகிய உலகங் களாய் விரியும். முடிவின்கண் சத்த மாத்திரையே உள்ளது என்று இவ்வாறு அறிவதே முத்தி.

### கிரீடாப்பிரமவாதம்

முன்கூறப்பட்ட பிரமமே நான். நான் ஒருபடித்தல்லாமல் பல வேறு வகைப்பட்ட பொருள்களோடு கூடிப்பலவாற்ருன் விளையாடு கிறேன் என்று அறிவதே முத்தி அனைத்தும் பிரமத்தின் லீலை. அந்தப் பிரமம் நானே என்பது.

### 4. சாங்கிய மதம்

இந்தச்சாங்கியம், நிரீச்சுர சாங்கியம், சேசுவர சாங்கியம் என இருபிரிவுகளாய்க் கூறப்படும். முன்னது ஈசுவரனைக் கொள்ளாதது. பின்னது ஈசுவரனைக் கொண்டது. பின்னது சிவசாங்கியம் என்றும் விஷ்ணு சாங்கியம் என்றும் பின்னும் இருவகைப்படும். இந்நூல் செய்தவர் கபிலர். மூலப்பகுதி நித்தமாய் வியாபகமாய்ச் சடமாய் எல்லாப் பொருட்கும் காரணமாய் முக்குணங்களும் ஒப்பநின்ற அவதரமாய் அருவாய் உள்ளது. இது இருபத்து நான்காம் தத்துவம். நிலம் முதல் புத்திவரை உள்ள இருபத்து மூன்று தத்துவங்களும் இதன் கண் தோன்றின. புருடன் இருபத்து ஐந்தாம் தத்துவம். முத்தியிலும் பெத்தத்திலும் ஒரே தன்மயன். தாமரை இலை போல் ஒட்டாது நிற்பன். சுவிச்சை வயத்தால் பெத்தன். இங்கு இன்ப துன்ப உணர்வு தோன்றுகிறது. புத்தி மூலப்பகுதியின் பரி ணமம். அதுவே மான் என்றும் அந்தக்கரணம் என்றும் கூறப்படும். அது பொறிவழியால் ஞானமாய்ப் பரிணமித்து விடையத்தில் செல் லும். புருடன் செய்வான், புத்தி அறியும் என்பது வேற்றுமை. அறி யாமையால் வரும் இரண்டையும் பகுத்தறிய, சுவிச்சை நீங்கும். அதுவே முத்தி. சாங்கியம் கூறும் சற்காரியவாதம், சற்காரியவா தத்தைக்கொள்ளும் சைவம் முதலான எல்லாச்சமயங்களுக்கும் உப காரமாய் உள்ளது. இதனுள் கூறப்பட்ட அத்தியாச வாதம், (ஒன் றன் குணத்தை வேருென்றின் மீது ஏற்றிச் சொல்லும் வாதம்) மாயா வாதத்திற்கு உபகாரம்,

### 5. யோக மதம்

இங்குத்தத்துவங்கள் பெத்த முத்திகள் முந்திய நிரீச்சுர சாங் கியத்தில் கூறியதுபோல, எட்டுவகை உறுப்புக்கொண்ட யோகமும், மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்துணரும் விவேக உணர்வுபோல, முத்திக்கு ஏதுவாகும். இருபத்துஆறும் தத்துவம்: இறைவன் ஒருவன் உளன், அவன் முற்றுணர்வு உடையவனுய்ச் சாத்திரங்களை அருளிச் செய்து புருடனுக்கு ஞானத்தை அறிவுறுப்பவன் ஆதலால், அவன்

ஆன்மாக்களுக்கு வேருனவன் என்று உணரப்படும். பதஞ்சலி யோக சூத்திரம் என்பது நன்ருக அறியப்பட்ட ஒன்று.

## 6. பாஞ்சராத்திரம்

பாஞ்சராத்திரம் என்பது, பாஞ்சராத்திரம் வைகானசம் என்ற இரண்டு வகையான வைணவ ஆகமங்களில் சொல்லப்பட்டது. இங்கு பாஞ்சராத்திர மதத்தைப் பின்பற்றி ஒழுகுவோருடைய மதம். இரு பத்து நான்காம் தத்துவமாகிய குணதத்துவத்தின் அப்பால் உள்ள வாசுதேவனே பரம்பொருள். அவனுல் சடமும் சித்துமாகிய எல்லா உலகும் படைக்கப்பட்டன. எல்லாம் வாசுதேவனின் பரிணாமம். பிர பஞ்சத்தை இரட்சிப்பது காரணமாக அவன் திருமேனி எடுத்தான். முறையே தீக்கை பெற்று வாசுதேவனை வழிபட்டு அவனேடு இலயம் ஆவதே முத்தி. பஞ்சராத்திரியில் நூல் செய்தமையால் பாஞ்சராத்திரி என்று பெயர். பத்து அவதாரங்களும் ஆன்மாக்களுக்கு அருள் செய்தல் பொருட்டு. நூல்கள் பஞ்சாராத்திர மதத்தைத் தத்துவ முறையில் சொல்லவில்லை. எல்லாமே புராணக்கதைகளைச் சொல்லி மறுக்கின்றன. சித்தியாரில் பாஞ்சராத்திர மதம் மறுதலைக்கு உள்ள பாடல்கள் ஏழு, முட்பத்து ஒன்று.

மேற்கூறிய புறச்சமயங்களில் ஆறு வகையும் நூல்களில் வெவ்வேறு மாறுபாட்டோடு காணப்படுகின்றன. சித்தியார் தருக்கத்தைக் கூறவில்லை. மீமாம்சை இரண்டு ஆகிய பட்டாசாரியனையும் பிரபாகரனையும், ஏகான்ம வாதத்தில் சத்தப்பிரமவாதம் மாயாவாதம் பாற்கரியம் என்ற மூன்றையும், நிரீச்சுர சாங்கியத்தையுமே கூறுகிறது. யோகமும் கூறவில்லை. ஆனுல் அடுத்து பாஞ்சராத்திரக் கதைகளைக்கூறி மறுக்கிறது.

தத்துவப்பிரகாசமானது புறப்புறம் எட்டை நீக்கி, புறச்சமயமாகப் பதினறு சொல்லுகிறது. இங்கு பட்டாசாரியார் பிரபாகரன் நையாயிகம் சத்தப்பிரமவாதம்—ஆகிய நான்கையும் பாட்டம் என்ற பெயரால் சொல்லுகிறது; மீமாம்சை என்ற பெயரால் மீமாம்சை பாற்கரியம் நிரீச்சுர சாங்கியம் வைசேடிகம் என்ற நான்கையும் கூறுகிறது. பாஞ்சராத்திரம் என்ற பெயரால் பாஞ்சராத்திரம் வைணவம் வைகாசனம் சோதிடம் மாயாவாதம் வேதாந்தம் துவிதவாதம் அத்துவிதவாதம் என்று எட்டுப்பேதம் சொல்லுகிறது. ஆக இவை இந்நூல் கூறும் புறச்சமயமாக நாம் கருதலாம். ஆனுல் இப்பாகுபாட்டுக்கும் பிறர்கொண்ட பாகுபாட்டிற்கும் வேற்றுமைகள் நிரம்ப உள்ளன.

# திருத்தலயாத்திரை

வித்துவான் **வே. மகாதேவன்** எம். ஏ.

## திருப்புன்கூர் — (தொடர்ச்சி)

'இராசேந்திரன்' என்னும் சோழனுக்கு ஆண்மகன் பெற அருள் செய்தார் இவ் வண்ணல்'

'சந்திரன் அழிந்த. கலைகள் வளர வழிவேண்டினன்; வாழ்வ வித்தார் இவ் வள்ளல்'

'கதிரவனின் பற்கள், அக்கினி யின் கரங்கள் மீண்டும் பெற வழி செய்தார் இம்மாதேவர்'

என்றுஸ்தலபுராணம்இவருடைய அருட் பெருந்திறத்தை அறி வுறுத்துகிறது.

'ஏயர்கோன் கலிக்காமர்' என் னும் நாயனாரின் எண்ணிலாச் சிவப்பணிகளை ஏற்று மகிழ்ந்தார் இச் சிவலோகநாதர்' என்கிறார் சேக்கிழார்.

"முன்னொரு காலத்தில் சோழ நாட்டில் மழைவளம் குறைந்தது; வயல்கள் வரண்டன. மழை வேண்டி இவ்விறைவனை வழிபட் டனர் சிவனடியார்கள். 'மழை தரின் பன்னிரு வேலி நிலம் நினக் குத்தருவோம்' என வேண்டினர். ஆண்டவன் அருள்புரியவே, பெரு மழை பொழிந்தது. குளமும் வயலும் நிறைந்தும் பெருமழை நிற்பதாகத் தெரியவில்லை. அஞ்சி னர் அடியார்; இறைவனை வணங் கினர் "திருப்புன்கூர் நாதா! பெருமழை நிற்க அருள் புரிய வேண்டும். மீண்டும் பன்னிரு வேலி நிலம் தருவோம்' என்று வேண்டினர். மழை நின்றது. இவ்வாறு இச் சிவலோகநாதர் இருமுறை நிலம் கொண்ட திறத் தை-திருவிளையாடலை விளக்கியுள் ளார் சுந்தரர். பன்னிரு வேலி நிலம் தந்தவருள் முதல்வர் ஏயர் கோன் கலிக்காமர் என்பதனை,

> "ஏத நன்னிலம் ஈரறுவேலி
> ஏயர்கோன்"

என்று சுந்தரர் குறிப்பர்.

திருப்புன்கூர்ச் சிவலோகநாத னைத் தேவார மூவரும் போற்றிப் பரவி இருக்கின்றார்கள்.

'திருஞான சம்பந்தர்' திருப் புன்கூர்நண்ணினார்; ஆடியபாதம் இறைஞ்சி அருந்தமிழ் பாடினார். அவர் அருளியது 'முந்திநின்ற வினை கள்' என்று துவங்கும் திருப் பதிகம்.

'திருநாவுக்கரசர்' நீடூரில் இருந்து புன்கூர்ச் சிவலோகன் கழல் நினைந்து பாடியது 'பிற வாதே தோன்றிய பெம்மான்' என் னும் திருப்பதிகம். 'திருப்புன்கூர் மேவிய சிவலோகன்' எனப் பாடல்தொறும் பரவுவர் ஆளு டைய அரசர்.

ஏயர்கோன்கலிக்காமரின் இரும் பிணிதவிர்த்தார் சுந்தரர்: இருவரும் இணைபிரியா நண்பராயினர், ஒருங்கே சென்று திருப்புன்கூராரை வணங்கினர். அப்போது சுந்தரர், 'அந்தணாளன் உன்' என்று துவங்கும் பதிகம் பாடிச் சிவன் அருட்செயல்களை வியந்து துதித்தார்' என்கிறது பெரியபுராணம்.

பேரருட் பிழம்பாய் விளங்கும் இப்பரம் பொருளை வணங்கி மகிழ்கிறோம்.

மகாமண்டபத்தின் வடபால் கோயில் கொண்டிருக்கிறார் ஆடல் வல்ல அழகர்.

நாடவல்ல மலரானும்
மாலுமாய்
தேடநின்றார் உறையும்
திருப்புன்கூர்
ஆடவல்ல அடிகள் இவர்
போலும்
பாடல்ஆடல் பயிலும்
பரமரே.

என்னும் திருஞானசம்பந்தர் வாக்கிற்கு ஏற்ப அமையும் திருமேனி இது. சோழர் காலப்பெருமைக்கு ஓர் எடுத்துக்காட்டு இது. இத் திருமேனியின் வலது புறம் நாற்கரமுடையபூதகணமொன்று தன் இருகரங்களால் பஞ்சமுக வாத்தியம் இசைக்கிறது. வேறொரு பூதகணம் தாளமிடுகிறது. – இக்காட்சி இவ்வூரில் அமைந்த திருமேனியில் மட்டுமே காணப்படும் தனிச் சிறப்பாகும்.

திருக்கோயிலை வலம்வருங்கால் அர்த்தமண்டபம், இறையகம் - புழைகளில் காணப்படும் திருவுருவங்கள் நம் கண்ணுக்கும் விருந்தூட்டுகின்றன. 1. நர்த்தன கணபதி 2. பிட்சாடணர் 3. அகத்தியர் 4. தென்முகக் கடவுள் 5. அண்ணாமலையார் 6. பிரமன் 7. அர்த்தநாரி 8. க்ஷேத்திரபாலர் 9. துர்க்கை ஆகியவை அப்புழையுருவங்கள். 'செம்பியன்மாதேவி கலைப்பாணியில்' அமைந்த இக்கோயிலில் காணப்பெறும் இவற்றுள் ஆறுசிலைகள் ஒன்பதாம் நூற்றாண்டுக்குரியவை. இவை இக்கோயிலின் சோழர்காலத்தொன்மையைத் தெளிவாகக் காட்டுவன ஆகும்.

பிரகாரத்தின் மதிலை ஒட்டித் தொடர்ச்சியாக அமையும் கட்டடப் பகுதியைத் 'திருச்சுற்று மாளிகை' என்பது வழக்கம். இக்கோயிலில் திருச்சுற்று மாளிகை உள்ளது. திருச்சுற்றாலையின் தென்மேற்குப் புறத்தே 'சோமாஸ்கந்தர்' கோயில்கொண்டுள்ளார். மேற்கே ஆறுமுகனுக்கு ஓர் ஆலயம் உள்ளது. வள்ளி தெய்வானையுடன் காணப்படும் இம்முருகப்பெருமான் திருவுரு மிகமிக விசேஷமானது. ஆறுமுகங்களும் பன்னிரு தோள்களும் உடையவராக ஏறுமயில் ஏறிக் காட்சி தருகிறார் கந்தக் கடவுள். இப்பகுதியில் 'அகத்தியர்' முதலியோர் பூசித்த லிங்கங்கள் உள்ளன.

திருச்சுற்று மாளிகையின் வட கிழக்கிலமைந்துள்ளது அம்மன் கோயில். இக்கோயில் முழுமையும் நகரத்தார் கலைப்பாணியில் கட்டப்பட்டுள்ள ஆலயம்.

திருப்புன்கூர்த் திருக்கோயிலில் ஐந்து கல்வெட்டுக்கள் உள்ளன. இவற்றுள்,

"திருப்புன்கூர் உடையார்
சிவலோக முடையார்"

என்று கூறப்படுகிறார் இறைவன். 'திருப்புன்கூர், இராசாதிராச வள நாட்டில், திருவாலி நாட்டில் இருந்தது' என்று இவை கூறுகின்றன. 'கோப்பெரும் சிங்கன்' என்னும் பல்லவ அரசன் காலத்தில் 'சிவலோக முடையார்க்குத் திருமஞ்சனமாட்டவும் திருமாலை சார்த்தவும் நிலதானம் தரப்பட்டமையை' ஒரு கல்வெட்டுக் காட்டுகிறது. பிற சாசனங்கள் திருவிளக்கு எரிப்பிக்கத் தரப்பட்ட தானச் செயல்களை விளக்குகின்றன.

மூன்றும் இராசராச சோழனின் காலத்தில் இக்கோயிலின் இரண்டாம் பிரகாரத்தில் 'விக்கிரம சோழீச்வரம் உடைய நாயனார் கோயில்' என்னும் சுற்றாலயம் கட்டப்பட்டது. 'விக்கிரம சோழனை வயநாட்டரையன் மருதாருடையான்' என்பவன் இத்திருப்பணி புரிந்தான்; வழிபாடு முதலானவற்றுக்காக நிலமளித்தான்' என்று ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. அச்சுற்றாலயம் இன்று இருப்பதாகத் தெரியவில்லை.

திருக்கோயிலின் முன்புறமுள்ளது இந்திரனால் வெட்டப்பட்ட 'இந்திர தீர்த்தம்'; பின்புறம் உள்ளது இடப தீர்த்தம். 'திருக்கயிலாயத்தில் இருக்கும் இடப தீர்த்தத்தையே சிவபெருமான் இங்குத் தோற்றுவித்தார்' என்பது தலமான்மியம். நந்தனருக்காகக் கணபதி அகழ்ந்தமையினால் 'கணபதி தீர்த்தம்' என்றும் இதனைச் சிலர் கூறுவர்.

இக்கோயிலுக்கு 21–7–1908-ல் கானாடுகாத்தான் திரு. தூ. கரு. சிதம்பரம் செட்டியார் பெரும் பொருட்செலவில் திருப்பணி செய்து மகா கும்பாபிடேகம் புரிந்தார். 1951-லும் 1974-லும் பல திருப்பணிகளும், கும்பாபிடேகங்களும் நிகழ்ந்தன.

இக்கோயில் அறநிலையப் பாதுகாப்புத்துறையினரின் பரிபாலனத்தில் உள்ளது. ஐந்து காலங்களிலும் பூசை நடைபெறுகிறது. முன்பெல்லாம் சிறப்பாக நிகழ்ந்த வைகாசி விசாகப் பெருவிழா, தற்போது ஏகதின உற்சவமாகி விட்டது. புரட்டாசி மாதத்தில் நந்தனார் திருவிழா நடைபெறுகிறது.

இவ்வாலயத்துடன் தொடர்புடைய தலங்கள்சில இவ்வூருக்கருகில் உள்ளன. அவற்றுள்ஒன்று 'பெருமங்கலம்'. இங்கு ஏயர்கோன் கலிக்காம நாயனார் வாழ்ந்தார். இவ்வூரில் 'வன்றொண்டீச்வரம்' என்னும் சிவாலயம் உள்ளது. மற்றொரு ஊர் 'கன்னியாகுடி'. திருப்புன்கூர் இறைவனை வழிபட்ட உமாதேவி சப்தகன்னியாக அங்குத் தங்கினார் என்பது தலபுராணம்.

திருப்புன்கூர் அந்தமில்லா அடிகள், இணையடிகளை ஏத்தி முந்தி நின்ற வினைகளில் இருந்து நீங்குவோமாக.




தெளிவுரை:

கு. சுந்தரமூர்த்தி எம். ஏ. திருப்பனந்தாள்.

1. கண்ணுதலும் கண்டக் கறையும் கரந்தருளி
மண்ணிடையில் மாக்கள் மலமகற்றும்—வெண்ணெய்நல்லூர்
மெய்கண்டான் என்றுஒருகால் மேவுவரால் வேறின்மை
கைகண்டார் உள்ளத்திற் கண்.

(தெளிவுரை) நெற்றிக்கண்ணையும் கழுத்திலுள்ள கருநிறத்தையும் மறைத்துக்கொண்டு இவ்வுலகிலுள்ள உயிர்களின் மலத்தை நீக்குதற் பொருட்டுத் திருவெண்ணெய்நல்லூரில் மெய்கண்டான் என்று ஒரு திருப்பெயரையும் சூண்டு எழுந்தருளியுள்ளான் என ஒருமுறை மனத்தகத்து நினைந்து போற்றுவராயின் அவர் தமது உள்ளத்தின்கண் சிவபெருமானை வேறன்றிக் கண்டவராவர் என்பதாம்.

நெற்றிக்கண்ணும் நீலகண்டமும் சிவபெருமானுக்கே உரிய அடையாளங்களாகும். ஆதலின் அப்பெருமானை நினைவோர் இவ்விரண்டு அடையாளங்களுள் ஒன்றைமட்டுமோ அன்றி இரண்டையுமோ நினைந்து போற்றுவர். 'நுதல்விழி நாட்டத்து இறையோன்', 'நீலமணிமிடற்று ஒருவன்போல' என வருவன காண்க. அப்பெருமானே தம் குருமூர்த்தியாக எழுந்தருளி ஆட்கொண்டார் என்பார் இவ்வாறு கூறினர். ஒருகால் நினையினும் இத்தகைய பேறுகிட்டும் என்றது அப்பெருமானின் அளவிறந்த கருணையைக் குறிப்பதாகும். வேறு அன்மை – ஒன்றாந்தன்மை.

2. கண்ணகல் ஞாலத்துக் கதிரவன் தான்என
வெண்ணெய்த் தோன்றிய மெய்கண்
காரா கிருகக் கலியாழ் ே
பேரா வின்பத் திருத்திய
வினவ லானு துடையேன்
நீங்கா நிலைமை ஊங்கும்
அறிவின் மைமலம் பிறிவ
ஒராலினை யுணர்த்தும் விர
திப்பியம் அந்தோ பொய்ட்
சுத்தன் அமலன் சோதி நா
முத்தன் பரம்பரன் எனும்
வேறுநின் றுணர்த்தின் விய

பேறும் இன்றும்எமக்குளம் டெடும!
இருநிலம் தீநீர் இயமானன் கால்எனும்
பெருநிலைத் தாண்டவம் பெருமாற்கு இலதுஆதலின்
வேறே வுடனே விளம்பல் வேண்டும்
சிறி யடுளல் சிறுமை யுடைத்தால்
அறியாது கூறினே அபக்குவ பக்குவக்
குறிபார்த் தடுளினம் குடுமுத லாயெனின்
அபக்குவம் அடுளினும் அறியேன் மிகத்தகும்
பக்குவம் வேண்டில் பயனில நின்றல்
பக்குவம் அதனல் பயன் நீவரினே
நின்னைப் படுவம் நிகழ்த்தாது அன்னே
தன்னைப் பாரிலி யென்பதும் தகுமே
மும்மலம் சடம்அணு மூப்புஇள மையின்நீ
நின்மலன் படுவ நிகழ்த்தியது ஆர்க்கோ
உணர்வெழு நீக்கத்தை ஓதிய தெனினே
இணையிலி யாயினே என்பதை யறியேன்
யானே நீக்கினும் தானே நீங்கினும்
கோனே வேண்டா கூறல் வேண்டும்
காண்பார் ஆர்கொல் காட்டாக் கால்எனும்
மாண்புரை யுணர்ந்தில மன்ற பாண்டியன்
கேட்பச் கிளக்கும் மெய்ஞ்ஞானத்தின்
ஆட்பா ல வர்க்கடு ளென்பதை யறியே.

(தெ-ரை) இடமகன்ற இவ்வுலகத்தின் கண்ணுள்ள இருளை நீக்குதற் பொருட்டு விண்ணிடத்துத் தோன்றிநிற்கும் கதிரவனைப்போல, உயிர்களிடத்து உண்டாகிய அறியாமை யென்னும் இருளை நீக்குதற் பொருட்டுத் திருவெண்ணெய் நல்லூரின்கண் எழுந்தருளியிருக்கும் மெய்கண்ட தேவனே! அறியாமையாகிய சிறைச்சாலையில் நின் அருள் பேறின்மையாம் வறுமையுள் கிடந்த அடியேனை நின்னுடைய பேரின்பப் பெருவாழ்வில் திளைக்கச் செய்தருளும் பெருமானே! நின்னிடத்து சில வினாக்களை விண்ணப்பித்துக்கொள்ள வேண்டுமென்னும் அமையாத அவாவினையுடையேன். அதனைக் கேட்டருள்வாயாக.

அடியேனிடத்து நீங்காதிருக்கும் முறைமை என்றும் நினக்கு உளதாய போதும் அடியேனுக்கு அறியாமை எங்ஙனம் வந்தது?

உயிரினிடத்து ஆணவமலம் பிரிவின்றி இருத்தலின் அவ்வறியாமை வந்தது என விடையருளின் நீர் அடியேனைவிட்டு நீங்கியருளினீர் என்பதை உணர்த்தும். அன்றி அடியேனிடத்துப் பிரிவின்றி இருந்தருளினிராயின், அவ்வாறு இருந்த காலத்தும் அடியேனிடத்து அவ்வறியாமை வந்ததென்பது. அந்தோ! வியப்பிலும் வியப்பாகவுளது. காரணம் அறியாமையை நீக்கி அருளுகின்றவன், வினைத் தொடர்பற்றவன், இயல்பாகவே மலங்களினின்றும் நீங்கியவன், உயிர்க்குயிராய் ஒளிரும் தலைவன், கட்டுக்களினின்றும் கழன்றவன், யாவர்க்கும் மேலானேன் என நினை அழைத்தல் பொருந்தாதாய் முடியும்

அவ்வாறு அடியேனிடத்து இயைந்து நின்றருளாது வேருக நின்றே அறிவித்தருளுவோமெனின் எம்பெருமானே! அது நுமக்கு யாண்டும் நிக்கமற நிற்பவன் என்னும் நிலைக்கு மாருகும். அன்றியும் நும் அருளால் நும்மைப்போன்று விளங்கும் பேறும் அடியேனுக்குக் கிட்டாதாகும், அன்றியும் 'இருநிலனய்த் தீயாகி' என வரும் அப்ப ரடிகளின் திருத்தாண்டகத்தின்படி எங்கும் எல்லாப் பொருள்களி னூடும் இயைந்து நிற்பவன் என்னும் நிலைக்கு மாருகும். ஆதலின் நீர் அடியேனது அறியாமையை நீக்கியருளுங்கால் வேருய் நின்று அருள் செய்வீரோ, அன்றி உடனய் நின்று அருள் செய்வீரோ, என்பதை அடியேற்கு விளக்கியருளுதல் வேண்டும். இவ்வாறு அடியேன் கேட்ட ருளுதற்குக் காரணம் அடியேனிடத்துத் தெளிவின்மையேயன்றி வேறன்று ஆதலின் சினவாதுஅருள்வீராக.

அறியாது கூறினே! அவரவரின் தகுதியும், தகுதியின்மையும் கண்டு நாம் குருவாக எழுந்தருளி நின்று அருளுவோம் எனில் அடி யேன் தகுதியில்லாதவனயின் நீர் அறிவிப்பினும் அறியாது ஒழிவேன். நின் அருள் பெறுவதற்கு மிகுதியான தகுதி வேண்டுமெனின் அத் தகுதியே அடியேனுக்கு நற்பேற்றினை விளைவிக்கும். ஆதலின் நும்மால் யாதொரு பயனும் இல்லை என முடியும். அன்றியும் அத்தகுதி யென்பது அறிவற்றதாதலின் அது நும்மை அடியேனிடத்து வருமாறு எங்ஙனம் செய்யும்? அன்றி அத்தகுதியே அனைத்துப் பேறுகளையும் தந்துவிடுமெனின் தனக்குவமையில்லாதான் எனும் தகுதி நுமக்கு எங்ஙனம் பொருந்துவதாகும்?

அடுத்து அத்தகுதியென்பது முப்பொருள்களுள் எதற்குவேண்டும் என்ற வினவும் எழும். முப்பொருள்களுள் ஒன்ருய மலங்கள் பக்குவம் பெற்றுத் தகுதியடைய வேண்டுமெனின் அவை அறிவற்றனவாதலின் தகுதியடைவது இன்ரும். உயிர்தகுதி பெறுவதெனில் அஃது வினை வயத்தால் உடலெடுக்கும்தொறும் இளமையும் மூப்பும் மாறி மாறி வரும் நிலையில் அவ்வுடலின் வேருக அவ்வுயிர்க்குத் தகுதியென்பது எங்ங்னம் வரும்? பதியாகிய நினக்குத் தகுதி வேண்டுமெனின், அத் தகுதியென்பதை இயல்பாகவே என்றும் உடையையாதலின் புதிதாக ஒரு தகுதியைப் பெறவேண்டுமென்பதில்லையே.

அல்லது எனக்கு அம்மலங்களினின்றும் நீங்கும் தகுதி வேண்டு மெனில் அம்மலங்களினின்றும் யான் நீக்கிக்கொள்ளும் தகுதி பெறி னும், அன்றி அவை என்னிடத்தினின்றும் தாமே நீங்கினும் யாவர்க் கும் தலைவனய நின்னல் பயனின்ருய் முடியும். நீயோ வினையை நீக்குதலில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன் எனக் கூறப்படு கின்றனை. ஆதலின் இதற்கு விடையருளல் வேண்டும்.

'காண்பார் யார் கண்ணுதலார் காட்டாக்காலே'என அப்பரடிகள் அருளுவதன் பொருளும் உணர்ந்திலை, பாண்டியன் கேட்ப வையைக் கரையில் திருஞானசம்பந்தப் பெருமான் அருளிய மெய்யறிவின் ஒரு பகுதியாக விளங்கும் 'ஆட்பாலவர்க்கருளும்' என்பதன் மெய்மையை யும் உணர்வாயாக என்பதாம்.

இப்பாடற்கண் இருபெரும் வினாக்கள் எழுப்பப்பட்டுள்ளன. ஒன்று, இறைவன் உயிர்க்கு அருளுங்கால் ஒன்றாய் நின்று அருளுவனோ? வேறாய் நின்று அருளுவனோ? என்பது. இறைவன் உயிர்களிடத்து அருளுங்கால் ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நின்றருளுவன் என்பது அதற்குரிய விடையாம். இறைவன் உயிர்க்கு எப்பொழுது அருளுவன்? என்பது இரண்டாவது வினாவாகும். உயிர்களின் மலநீக்கத்தின் பொருட்டுப் பல்பிறப்புக்களை யெடுக்கச் செய்து அவற்றால் உயிர்பக்கு வம் பெற்றகாலை இறைவன் குருவாக வந்தருளுவன் என்பது அதற் குரிய விடையாகும். எனவே இறைவனே தன் கருணைப் பேற்றினால் உயிர்களைப் பக்குவப்படுத்தி ஆட்கொள்வன் என்பது புலனாகும். இதனை விளக்கவே 'காண்பார் யார் கண்ணுதலார் காட்டாக்காலே' என்னும் திருவாக்கு எடுத்துக் காட்டப்படுகிறது. இறைவன் உயிர் களை உய்யக்கொள்ளுதற்குச் செய்யும் நிலை மிகப்பலவாகும். 'வேறு வேறுருவும் வேறு வேறு இயற்கையும் நூறு நூறாயிரம் இயல்பின தாகி' என வரும் பகுதி இவ்வுண்மையை விளக்கும். எனவே அப் பெருமான் ஆட் கொள்ளும் நிலையும் அருளும் திறனும் உயிர்களால் முற்ற உணர்தற்கு இல்லை. இதனை விளக்கவே 'ஆட்பாலவர்க்கருளும் வண்ணமுமாதி மாண்பும், கேட்பான் புகிலளவில்லை கிளக்கவேண்டா, கோட்பாலனவும் வினையுங்குறுகாமை யெந்தை, தாட்பால் வணங்கித் தலை நின்றிவை கேட்கதக்கார்' என்னும் திருப்பாடற் பகுதி காட்டப் படுகிறது. காராகிருகம் - அறியாமையென்னும் சிறைச்சாலை. கலி - வறுமை; திருவருட்பேறு பெறாத வறுமை. ஆறாது - அமையாது. என் சிற்றறிவினாலும், முற்ற அறிய வேண்டுமென்னும் விருப்பத்தாலும் நின்னிடத்து மேன்மேலும் வினாக்களை வினவும் கருத்துடையேன் என் பார் 'வினவல் ஆறாது உடையேன்' என்றார். ஒரால்-விட்டு நீங்குதல். திப்பியம் - வியப்பு. 'இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி யியமானனா யெறியுங் காற்றுமாகி, அருநிலைய திங்களாய் ஞாயிறாகி யாகாச மாயட்ட மூர்த்தியாகிப், பெருநலமுங் குற்றமும் பெண்ணுமாணும், பிறருருவுந் தம்முருவுந் தாமேயாகி, நெருநலையாயின்றாகி நாளையாகி, நிமிர் புன்சடையடி களின்றவாறே என்பது நின்ற திருத்தாண்டக மாகும். இறைவன் யாண்டும் நீக்கமற நின்றருளும் பெருநிலையைப் பேசுதலின் இதனைப் பெருநிலைத் தாண்டகம் என்றார். மன்ற-ஒருதலை யாக. ஞானசம்பந்தப் பெருமான் பாண்டியனை நோக்கியும், தீண்டியும் அருளியும் (உபதேசித்தும்) ஆட்கொண்டருளினர். ஆட்பாலவர்க் கருளும் எனத்தொடங்கும் திருப்பாடல் அமைந்துள்ள திருப்பாசுரம் அப்பாண்டியன் கேட்க ஞானசம்பந்தப் பெருமான் அருளிய அரு ளுரையாகும். அவன் கேட்கவும், அமணர்களை வெல்லவும் இப்பா சுரம் அருளப்பட்டதேனும் வையகமெல்லாம் துயர் நீங்குதற்குரிய வழிவகைகளையும் அவ்வாறு உய்தற்கு இறைவன்அருளும் அருட்திறங் களையும் இப்பாசுரம் அருளுதலின் இதனை மெய்ஞ்ஞானம் என்றார்.

# "பொன்னம்பலத்தின்"
# - தத்துவ க்ஷேத்திர வரலாறுகள்

தொகுப்பு :

சிதம்பரம் நிருபர். **மா. பாலசுப்பிரமணியன்.**

ஐம்பது கோடி யோசனை சதுர விஸ்திரணம் கொண்ட (ஒரு யோசனை என்பது 10 மைலாகும்) விராட்புருஷ ரூபமான இப்பூமியில் இச்சிதம்பர க்ஷேத்திரமானது விராட்புருஷனின் இருதய ஸ்தானத்தில் உள்ளது. சிதம்பர க்ஷேத்திரம் பூலோக கைலாசமாகும். மேலும் எல்லா க்ஷேத்திரங்களிலும் பூஜிக்கப்படுகின்ற சிவ-வைணவ மூர்த்தங்களுக்கும், மற்று கிராம தேவதைகளுக்கும் ''ஜீவகலையை'' பகலில் பிரகாசமளித்துக்கொண்டு இரவு 10 மணிக்கு அச்ஜீவகலையை ஒடுக்கம் செய்து கொள்ளும் உலக சபா நாயகரான ஸ்ரீமந் நடராஜப் பெருமான் ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்மையோடு "பொன்னம்பலத்தில்'' (சித்ஸபையில்) பஞ்ச மூர்த்திகளான, பிர்ம - விஷ்ணு - ருத்ரன் – மகேஸ்வரன் – சதாசிவம் - ஐந்து மூர்த்திகளையும் முறையே, ஐந்து பீடங்களாக அமைத்துக் கொண்டு, தென் திசையை நோக்கி ஆனந்த தாண்டவம் ஆடிக்கொண்டிருக்கிறார்.

சதாசிவபீடத்தில், ரிக் – யசுர் – சாம – அதர்வண வேதங்கள் நான்கும் தங்கமயமான ஸ்தம்பங்களாகவும்; ருத்திரபீடத்தில், தர்க்கம் - வியாகர்ணம் – வேதாந்தம் - மீமாம்சை – சோதிஷம் – வைத்தியம் என்னும் ஆறு சாஸ்திரங்களும் தங்கமயமான ஸ்தம்பங்களாகவும்; விஷ்ணுபீடத்தில், பிருதுவி - அப்பு – தேஜஸ் - வாயு - ஆகாசம் என்னும் ஐந்து பூதங்களும் ஐந்து ஸ்தம்பங்களாகவும்; பிர்ம பீடத்தில், காமிகம் முதல் வாதுளம் வரையான 28 ஆசனங்களும் 28 ஸ்தம்பங்களாகவும் அமைந்துள்ளன.

## 21600 தங்கமய ஒடுகளும் 72000 ஆணிகளால் பொறுத்தப் பட்டுள்ளன

ஞானமயமான ''பொன்னம்பலத்தின்'' முகட்டில் (மேலே) விராட்புருஷன் நாடோறும் வெளியில் விடுகின்ற மூச்சு, வெளியிலிருந்து உள்ளே இழுக்கின்ற மூச்சு 21600-உம் தங்கமய ஒடுகளாகப் பொறுத்தப்பட்டு, மேற்படி புருஷனின் நாடிகள் 72000-ம் 72000 தங்கமயமான ஆணிகளால் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஆணியிலும் 'சிவ சிவ'

என்று பதிக்கப்பட்டுள்ளதாகவும் தெரியவருகிறது.

### 9 சக்திகளும், 9 தங்கமய கலசங்களாகப் பிரகாசம் அளித்துக்கொண்டுவருகின்றார்கள்

பொன்னம்பலத்தின்மீது, 9 சக்திகளான சைலபுத்ரீ – ப்ரம்ஹசாரணி – கூச்மாண்டிகா - ஸ்கந்தமாதா - காத்யாயனி - காளராத்ரீ மஹா கௌரி - ஸித்திதா - சந்தரகண்டா ஆகிய சக்திகள் 9 தங்கமய கலசங்களாகவும் பிரகாசம் அளித்துக் கொண்டும் வருகின்றார்கள்.

### பொன்னம்பலத்திற்குள் மூன்று திருமேனிகளின் காட்சி

பொன்னம்பலத்திற்குள் உருவ, அருவு நவ, அருவமயமாக மூன்று திருமேனிகள் காட்சி அளித்துக் கொண்டு வருகின்றது. ஸ்ரீமந் நடராஜப்பெருமான் உருவத் திருமேனியுடனும், ரஹஸ்யஸ்தானம் அருவத்திருமேனியுடனும் காட்சி அளித்துக்கொண்டும் வருகின்றார். மும்மூர்த்திகளுடன் ''இரத்தினசபாபதி'' (மரகதத்திலான நடராஜப்பெருமான்)யும், சுவர்ண காலபைரவரும் காட்சி அளித்துக் கொண்டிருக்கின்றார்.

''அழகிய சிற்றம்பலமுடையாருக்கு'' (ஸ்படிகலிங்கம்) நாடோறும் 6 கால அபிஷேக ஆராதனைகளும் மரகதத்திலான ''இரத்னசபாபதிக்கு'' நாடோறும் காலை இரண்டாவது கால பூஜையின் போதும் அபிஷேக ஆராதனைகளும் நடைபெற்றுக் கொண்டு வருகின்றன.

### ரஹஸ்ய ஸ்தானத்தின் மகிமைகள்.

அருவத்திருமேனியான ரஹஸ்யஸ்தானம் ஸ்ரீமந் நடராஜப் பெருமானின் பின்பக்கத்தில் உள்ளது எப்பொழுதும் ரஹஸ்ய ஸ்தானம் நீல வஸ்திரத்தினால் மறைக்கப்பட்டிருக்கும். ரஹஸ்ய ஸ்தானத்தின் முன்னால் உயர்ந்த நவரத்னங்களைக் கொண்டு செய்துள்ள வில்வதளஹாரம், மற்றும் தங்கத்தால் செய்துள்ள வில்வ தள ஹாரங்கள் (சுமார் 10 ஹாரங்கள்) மாலைகளாக அணியப்பட்டிருக்கின்றது. நாடோறும் 6 கால பூஜை நடைபெறும் பொழுது, பூஜகரான தீக்ஷிதர் பொன்னம்பலத்திற்குள் ஸ்ரீமந் நடராஜப்பெருமானுக்கு கற்பூர தீப ஆராதனை செய்தவுடன், ரஹஸ்யதானத்தைமறைத்துள்ள நீல வஸ்திரத்தை மூன்று முறை உயரே உயர்த்தி பக்தகோடிகள் தரிசனம் செய்துகொள்ளுவதற்குக்காண்பிப்பார். ரஹஸ்ய ஸ்தானத்திற்கு ''சிதம்பர ரஹஸ்யம்'' என்று பெயர். இந்த ரஹஸ்யஸ்தானத்திலிருந்து தான் நாடோறும் காலை 6 மணிக்குமேல் 7 மணிக்குள் 'ப்ரம நாடி' என்றுகூறும் சுழுமுனை நாடி (ஜீவகலை) தோன்றி கைலாயம்

வரையும்—மற்றும் எல்லா க்ஷேத்திரங்களிலும் பூஜிக் ப்படும் சைவ-வைணவ மூர்த்தங்களிலும், மற்றும் கிராம தேவதைகளிலும் ஜீவகலையைப் பிரகாசம் அளித்துக்கொண்டு இரவு 10 மணி அர்த்தசாம பூஜையில் ஸ்ரீமந் நடராஜப் பெருமானிடத்தில் வந்து ஒடுங்குகின்றது. இரவு அர்த்தசாம பூஜையில் தேவர்கள் முதலானோர்கள் வந்து, ஸ்ரீமந் நடராஜப் பெருமானைத் தரிசனம் செய்துகொண்டு வருகின்றார்கள் என்று வரலாற்றில் கூறப்பட்டுள்ளது.

ஆகவே காலை 7 மணிக்குள் நடைபெறும் ''பால் நைவேத்திய பூஜையும் - இரவு 10 மணிக்கு நடைபெறும் அர்த்தசாம பூஜையும் மிக மிகச் சிறப்புடைய பூஜைகளாகும்.

### ரஹஸ்ய ஸ்தான தரிசன பலன்கள்

ரஹஸ்யஸ்தானத்தை எந்தப பிரயோஜனம் கருதித் தரிசனம் செய்கின்றார்களோ அவர்கள் அப்பிரயோஜனத்தை நிச்சயம் பெற்றிடுவார். நிஸ்ஸங்கல்பமாக (பிரயோஜனம் கருதாமல்) யார் தரிசனம் செய்கின்றார்களோ அவர்கள் எடுத்த ஜன்மத்தின் இறுதியில் பரமானந்தப் ப்ராப்தியைப் பெற்றிடுவார்கள். ரஹஸ்யமென்னும் ஞானவெளியில்தான் மாணிக்கவாசகர், நந்தனார் போன்றோர் கலந்துள்ளார்கள்.

### ஸ்ரீமந்-நடராஜப்பெருமான் உலக ஜீவகலை வங்கியாகக் காட்சி அளித்து வருகின்றார்

உலக நாடுகளுக்கெல்லாம் அமெரிக்க நாட்டிலுள்ள ஐக்கிய நாட்டு உலக வங்கியானது கடன் கொடுத்துவிட்டு, அக்கடனை திருப்பிப் பெற்றுக்கொண்டு வருவதுபோல், எல்லா க்ஷேத்திரங்களிலும் பூஜிக்கப்பட்டு வருகின்ற சைவ-வைணவ மூர்த்தங்களுக்கும் (கிராம தேவதைகள் உள்பட) ஸ்ரீமந் நடராஜப் பெருமானிடத்திலிருந்து, நாடோறும் ஜீவகலை பகல் முழுதும் பிரகாசம் அளித்துக்கொண்டு இரவு 10 மணிக்கு ஒடுங்கி வருகின்றதால் பூலோக கைலாசமான சிதம்பர க்ஷேத்திரத்தில் ஸ்ரீமந் நடராஜப் பெருமான் உலக ஜீவகலைக்கு வங்கியைப் போல் காட்சி அளித்துக்கொண்டு வருகின்றார் என்பது சிறப்பு அம்சமாகும்.

### உலக சபாநாயகரான ஸ்ரீமந்-நடராஜப்பெருமானுக்கு பிரபலமான க்ஷேத்திரங்கள் பரிவார க்ஷேத்திரங்களாக விளங்குகின்றன

பூலோக கைலாசமாகிய சிதம்பர க்ஷேத்திரத்திலுள்ள உலக சபாநாயகரான ஸ்ரீமந் நடராஜப் பெருமானுக்கு பிரபலமான க்ஷேத்திரங்கள் பரிவார மூர்த்திகளின் க்ஷேத்திரங்களாக அமைந்துள்ளன. அவைகள் வருமாறு:—

1. திருச்சிராப்பள்ளி க்ஷேத்திரம் ஸ்ரீ விநாயகர் க்ஷேத்திரமாகவும்,

2. திருப்பதி க்ஷேத்திரம் ஸ்ரீ ஸ்கந்தர் க்ஷேத்திரமாகவும், 3. பூலோக வைகுந்தம் என்று கூறும் ஸ்ரீரங்கம் விஷ்ணு க்ஷேத்திரமாகவும், 4 வட இந்தியாவிலுள்ள ஆஜ்மீர் க்ஷேத்திரம் ஸ்ரீ பிர்மாவின் க்ஷேத்திரமாகவும், 5 அட்ட வீரட்ட க்ஷேத்திரம் ஸ்ரீ பைரவர் க்ஷேத்திரமாகவும்; 6. திருவாரூர் க்ஷேத்திரம் ஸ்ரீ சோமாஸ்கந்தர் க்ஷேத்திரமாகவும்; 7 ஆவுடையார்கோயில் க்ஷேத்திரம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி க்ஷேத்திரமாகவும்; 8. இலங்கை நாட்டிலுள்ள திருக்கோணமலை க்ஷேத்திரம் ஸ்ரீ நந்திதேவர் க்ஷேத்திரமாகவும் 9. வட இந்தியாவிலுள்ள விஜயவாடா ஸ்ரீ துர்க்கை க்ஷேத்திரமாகவும் 10 திருக்கழுகுன்றம் க்ஷேத்திரம் ஸ்ரீ சண்டிகேஸ்வரர் க்ஷேத்திரமாகவும் 11. திருவானைக்கா க்ஷேத்திரம் ஸ்ரீ சூரியன் க்ஷேத்திரமாகவும் உள்ளன.

**மேலும் சிறப்புமிக்க வரலாறுகள்**

1. கோகர்ணம் – 2 ஸ்ரீசைலம்- 3. திருவிடைமருதூர் - 4. காசி- 5 மதுரை ஆகிய ஐந்து க்ஷேத்திரங்களில் பூஜிக்கப்படும் மூர்த்திகள் முறையே ஈசானம் - தத்புருஷம் - அகோரம் - வாமதேவம் - சத்யோசாதம் என்னும் பஞ்ச முகங்களாகவும்; 1 சித்ஸபை - இருதயமாகவும், 2. திருக்கேதாரம் - சிரசாகவும். 3. திருவண்ணாமலை - சிகையாகவும், 4. காளஹஸ்தி - கவசமாகவும், 5 காஞ்சீபுரம்-நேத்திரமாகவும், 6. ராமேஸ்வரம் - அஸ்திரமாகவும அங்கங்களாகவும் அமைந்துள்ளன.

**போற்றப்பட்டவர்கள்**

மேலும பிர்மா - விஷ்ணு - முதலான தேவர்களாலும, வேதவியாசர், வியாக்ரபாதர், உபமன்யு, பதஞ்சலி, ஜைமினி, சுகர் முதலான முனிவர்களாலும், திருமூலர், கொங்கணர், போகர் முதலான சித்தர்களாலும், சமயாசாரியர்கள், சந்தனுசாரியர்களாலும் போற்றப்பட்டுள்ள க்ஷேத்திரமாகும்.

ஆதிசங்கரர் இந்தச் சிதம்பர க்ஷேத்திரத்தில்தான சன்யாசம் பெறறு வேதாந்த சாஸ்திரங்களை இயற்றியுமுள்ளார் இவ்வாறே பாணினி, காத்தியாயனர், பதஞ்சலி முனிவர்கள் வியாகரணம் - சூத்திரங்கள் முதலான மஹாபாஷ்யங்களை, பெருமானது டமருகத்வனியிலிருந்து வெளிவந்த பதினன்கு சூத்திரங்களைக்கொண்டும் செய்தும, மற்றும் பல முனிவர்கள் அச்சூத்திரங்களைக் கொண்டே பல சாத்திரங்களைச் செய்துமுள்ளார்கள்.

## உங்கள் ஜன்ம நட்சத்திரம் என்று வருகிறது?

# திருவிளையாடற் புராணம்

## உரை நடை

இடுக்கண் வந்து, உயிருக்கே இடையூறு விளையினும் [1]வாய்மையைப் பாதுகாத்துக் குற்றமற ஒழுகும் வேளாள மரபிற் பிறந்த அவனுடைய வார்த்தையை இறைவன் உயிர்களின் பொருட்டு எடுத்துக்கூறிய வேதமொழிபோல நம்பி உக்கிர பாண்டியன் சிறையின் கண் இட்டிருந்த மேகங்களின் தளையினை நீக்கி விடுவித்தான். மேகங்கள் நான்கும் யானைகள்போல் மீண்டு சென்றன.

**பாண்டிநாடு செழித்து விளங்கல்**

அதன்பின்னர், இந்திரன் கட்டளையினாலே பாண்டி நாட்டில் மாதம் மும்மாரி பெய்துவர, வாவி, குளம், ஆறு, மடு முதலியன நிறைந்து வயல்களிலும் படுகைகளிலும் செந்நெல்லும் கரும்பும் செழித்து ஓங்கின. பூஞ்சோலைகள் பொலிவுடன் விளங்கின. முன்போல் கன்னிநாடாகிய பாண்டிநாடு பொலிவு பெற்று விளங்கியது.

செய்யுள் — 59
ஆகச் செய்யுள் — 1111

## 15. மேருவைச் செண்டால் அடித்த படலம்

**வீரபாண்டியன் பிறப்பு**

உக்கிர பாண்டியன் முன்பு அகத்திய முனிவர் தனக்குச் சொன்ன சோமவார விரதத்தை அன்றுதொட்டு அனுட்டித்து வரலும், அதன் பயன்போலக் காந்திமதியின் திருவயிற்றிலே ஒரு சற்புத்திரன் வந்து உதித்தான். மன்மதனைப் போன்ற அக்குழந்தை பிறந்த காலத்து நகர மக்கள் இசைக்கருவிகளை ஒலிப்பித்து மகிழ்ந்தனர். சயந்தன் பிறந்த காலத்து இந்திரன் பெற்ற மகிழ்ச்சியைக் காட்டிலும் மிகுந்த மகிழ்ச்சியினை உக்கிர பாண்டியன் அடைந்தான்; சாதகன்ம முதலிய சடங்குகளைச் செய்து முடித்து அப்புத்திரனுக்கு, 'வீர பாண்டியன்' என்று பெயரிட்டான். உரிய காலத்தில் அப்புதல்வன் மறைகள் முதலிய பல கலைகளையும், யானை யேற்றம், குதிரை யேற்றம், தேர் செலுத்துதல், படைக்கலப் பயிற்சி முதலியவற்றையும் பயின்று விளங்க உக்கிர பாண்டியன் அதனைக்கண்டு மனமகிழ்ச்சி அடைந்தான்.

---

1. வேளாளர் வாய்மையினைப் பாதுகாத்தல் பின்வரும் சேக்கிழார் புராணச் செய்யுளால் அறியலாம்: ''மாறுகொடு பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் வணிகனுயிர் இழப்பத் தாங்கள், கூறியசொல் பிழையாது செந்திக் குழியிலெழுபதுபேரும் முழுகிக் கங்கை, ஆறணி செஞ்சடைத் திருவாலங்காட்டப்பர் அண்டமுடி நிமிர்ந்தாடும் அடியின் கீழ்மெய்ப் பேறுபெறு வேளாளர் பெருமை எம்மால் பிறித்தளவிட்டிவளவெனப் பேசலாமோ?'' என்பது.

### மீண்டும் கோள்நிலை திரிதலால் மழை மறுத்தல்

அக்காலத்தில் மீண்டும் ஒருமுறை கிரகங்கள் தத்தம் நிலை திரிந்தன. அதனால், பாண்டி நாட்டில் மழை வளம் குறைந்தது. ஆறு குளம் முதலியன நீரற்று வறண்டன. பருவம் மாறி உயிர்களெல்லாம் உணவின்றிப் பசியால் வருத்தமுற்றன. நாடு முழுவதும் வறுமைத் துன்பத்தில் ஆழ்ந்தன.

பாண்டியன் சோதிடர்களை நோக்கி, ''மழைவளம் குறைந்ததற்குக் காரணம் யாது?'' என்று வினவினன். அதற்கு அவர்கள் ''அரசே! பிற கிரகங்கள் சூரியனை நோக்கி நிற்றலால் ஓராண்டு வரை மழை பெய்யாது'' என்று கூறினர். அதனைக்கேட்ட பாண்டியன், குழந்தையுற்ற நோயைக்கண்டு வருந்தும் தாய்போல் வருந்திச் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று வணங்கி, ''ஐயனே! உயிர்களெல்லாம் பசியினாலே மிக மெலிந்து வருந்துகின்றனவே'' என்று கண்ணீர் ததும்பக் கூறி நின்று முறையிட்டு வேண்டினான். சோமசுந்தரக் கடவுள், காலத்தின் செவ்வியை உணர்ந்து ஒன்றும் கூறாது இரக்கமில்லாதவர் போல வாளா இருந்தார். பாண்டியன் கரையற்ற துன்பக்கடலில் மூழ்கியவனாய்த் தனது அரண்மனைக்குச் சென்றான். கதிரவனும் மேற்குக் கடலில் மூழ்கினான்.

### இறைவன் பாண்டியன் கனவில் தோன்றியருளல்

உக்கிர பாண்டியன், தனது குடைக்கீழ்த் தங்கிய உயிர்களின் பசி வருத்தம் அனைத்தையும் கவர்ந்துகொண்டிருந்த தன் உள்ளத்தினாலே முகப்பொலிவு குன்றிப் பெருந்துன்பத்தில் மூழ்கி நிலத்திலே கிடந்து நித்திரை செய்தான். அப்போது அவனது கனவின்கண் வெள்ளியம்பலவாணர் சித்தமூர்த்தியாய் எழுந்தருளி வந்து, ''ஒளி சிறந்த வேலோய்! இப்போது மழை பெய்யாது; நீ அதனை விரும்பி வருந்தற்க; மலைகட்கு வேந்தனாய் விளங்கும் மேருமலையின் பக்கத்தில் ஒரு பெரிய குகையிலே அளவற்ற திரவியம் சேமித்து வைக்கப்பட்டிருக்கின்றது. நீ அங்கே சென்று அம் மேருமலையை அதன் செருக்கு அடங்குமாறு செண்டாலடித்து, உனது ஆணை வயத்ததாக்கிப் பொன் வைத்திருக்கும் அறைமேல் மூடியுள்ள பாறையை நீக்கி, நீ வேண்டுமளவும் பொன்னை வாரி எடுத்துக்கொண்டு அவ்வறையை மீள அடைத்து உனது இலச்சினையை அதன்மேல் இட்டு வரக்கடவாய்'' என்று அருளிச் செய்தார்.

### உக்கிரபாண்டியன் வடநாடு செல்லுதல்

உடனே உக்கிரபாண்டியன் விழித்துக் கதிரவன் தோன்றுமுன் எழுந்து, நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு திருக்கோயிலை

அடைந்து சோமசுந்தரக் கடவுளை வலம் வந்து வணங்கிக் கடல்போல் பெருகிவரும் சேனைக்கூட்டம் புறத்தே சூழ்ந்துவரக் கோபுர வாயிலினைக் கடந்து கீழ்த்திசை நோக்கிச் சென்றான். அப்போது முரசங்கள் அதிர்ந்தன. சங்கங்கள் ஒலித்தன. இசைக்கருவிகள் ஆர்த்தன. வெண் கவரிகள் துள்ளி வீசின. வேதியர்கள் ஆசி கூறினர். புலவர்கள் புகழ்ந்து பாடினர். அரசன் தேரில் ஏறினான்; பாகன் விரைந்து தேரை முன்னே செலுத்தினான். பவளக் காம்பினையுடைய பீலிக் குடை, பொற்காம்பினையுடைய முத்துக்குடை, முத்துக்கள் கோத்த காம்பினையுடைய வெற்றிக் கொடிகள், யானைகள், குதிரைகள், வீரர்களின் கூட்டம், தேர்களின் கூட்டம் யாவற்றையும் நிலமகள் சுமந்து உடல் மெலிந்தாள். வளைந்த நகமும், புலால் நாறும் பிளந்த வாயும், மிகுந்த கோபமும் கொண்ட புலி எழுதிய பெரிய கொடியும், வளைந்த வில்லெழுதிய கொடியும் இருபுறமும் வர, நிலத்தைத் துழாவுகின்ற துதிக்கையையுடைய யானையின்மேலே மீனக்கொடி பெரிய விசும்பிலே வீறுடன் பறந்தது.

இவ்வாறு தென்கடல் வடதிசையை நோக்கிச் செல்வது போல உக்கிரபாண்டியன் தனது சேனையோடு தமிழ் வழங்கும் கன்னி நாட்டைக் கடந்து சோழ நாட்டை அடைந்தான். அப்போது சோழ மன்னன் எதிரேற்று உபசரித்து வழி அனுப்பினான். பிறகு மீனவன், தொண்டை நாட்டையும், தெலுங்க நாட்டையும், தாழையினை வேலியாகக் கொண்ட கருநட நாட்டையும், காடு, மலை, ஆறு முதலாயவற்றையும் கடந்து சோலைகள் நிறைந்த மாளவ நாட்டை அடைந்தான்; அங்கு நின்றும் கொடிய பாலைவனத்தைத் தாண்டி விராட நாட்டை அடைந்து, அங்கு நின்றும் முல்லை நிலத்தையும் குறிஞ்சி நிலத்தையும் கடந்து தென்னை மரங்கள் சூழ்ந்த மத்திய தேசத்தைச் சார்ந்து, புனிதம் பொருந்திய கங்கை பாயும் காசிமா நகரை அடைந்து கங்கையில் நீராடி, அகிலேசனை வணங்கிக் கொண்டு அநேக காத தூரம் கடந்த பின்னர் சிங்கம், யாளி, யானை முதலியன இயங்கும் மக்கள் செல்லாத இடங்களைக் கடந்து சென்றான். இவ்வாறே ஆயிரம் யோசனை அளவையுடைய குமரிக்கண்டத்தைக் கடந்து இது போல் இன்னும் எட்டுக்கண்டங்களைக் கொண்ட பாரத கண்டத்தைத் தள்ளி இமயமலையை அடைந்து, அதன் அப்புறமுள்ள கிம்புருட கண்டத்தை அடைந்து, அதனைக்கடந்து ஏமகூடத்தை அடைந்து, அதனைக் கடந்து அரிவருட கண்டத்தை அடைந்து, அதனைக் கடந்து அப்பாற் போய் நிடதவெற்பை அடைந்து, அதனையும் கடந்து சம்பு நதி பாயும் இளாவிருத கண்டத்தை அடைந்து முடிவில் மேருமலையைக் கண்டான். உடனே தன்னுடைய சேனைகளைப் பிரிந்து தனியே சென்று, வலமாகச்

சூழ்ந்து ஓடும் சம்புநதியின் அருகில் பசிய சொல்லைகளையும் காட்டை யும் நோக்கி வியந்து, மேருமலையை வலமாக வந்து நாவல்மரம் நிற்கும் தென்றிசையிலே நின்றான்.

**உக்கிர வழுதி மேருவைச் செண்டால் அடித்தல்**

அப்போது உக்கிர பாண்டியன் மேருமலையை நோக்கி, "மலை களுக்கு அரசே! என் தந்தையாகிய சிவபெருமானது திருக்கரத்தி லுள்ள வில்லே! பூமிக்குப் பற்றுக்கோடே! கிரகங்களும் நட்சத்திரங் களும் வலஞ்செய்யும் தெய்வத்தன்மையுடைய மலையே! தேவர்கள் வசிக்கும் ஆலயமே!" என்று அழைத்தான்; மகா மேருமலை உடனே வாராது காலந்தாழ்த்தமையால், இந்திரனை வெற்றிகொண்ட அப் பாண்டியன் நாணமுற்றுத் தன் கோபமும் மேருவின் செருக்கும் நீங்கு மாறு அம்மலையின் சிகரத்திலே செண்டினால் அடித்தான்.[1] உடனே ஒருகாலும் அசையாத மேருமலை அசைந்து பொறபந்து துடித்தாற் போல் துடித்தது. அதன் சிகரங்களும் அச்சிகரங்களிலே தேவர்கள் வசிக்கப்பெற்ற ஆலயங்களும் வெடித்தன; கதிரவன் மண்டலம் பிளந்து துகளாகிப் பூமியில் சிந்தினாற்போல் பலமணிகளும் சிதறின; மேருவின் அருகில் சூழ்ந்து நின்ற [2]மலைகள் எட்டும், செம்பொன்னா லாகிய [3]அடைகல் (பக்க மலைகள்) நான்கும், [4]கிடங்குகள் (ஓடைகள்) நான்கும், [5]பொழில் நான்கும், [6]தருக்கள் நான்கும் நடுங்கின. **தலைவனுக்கு இடையூறு நேர்ந்தால் அவனைச் சார்ந்தவர்க்கு மகிழ்ச்சி உண்டாகுமோ? ஆகாது.** இவ்வாறு உக்கிரபாண்டியனின் செண்டால் அடிபட்ட பின்பு, மேருமலைத் தெய்வம் எட்டுத் தோள்களும் நான்கு தலைகளும், ஒரு வெண் குடையுங்கொண்ட உருவத்தோடு எழுந்து வந்து நாணி அவன்முன் நின்றது.

---

1. ஒரு சமயம் கரிகாலனும் இமயஞ் சென்று அதனைச் செண்டி னால் தாக்கினான் என்ற வரலாறு உளது. இதனை, "செண்டுகொண்டு கரிகாலன் ஒரு காலில் இமயச் சிமயமால் வரை திரித்தருளி மீள" எனவரும் கலிங்கத்துப்பரணி அடிகளாலும் அறியலாம்.

2. மலைகள் எட்டு - நிடதம், ஏமகூடம், இமயம், நீலம்,சுவேதம், சிருங்கம், கந்தமாதனம், மாலியவான் என்னும் எட்டு மலைகள்.

3. அடைகல் நான்கு - மந்தரம், கந்தமாதனம், விபுலம், பார் சுவம் என்னும் நான்கு பக்க மலைகள்.

4 கிடங்கு நான்கு - அருணம், மானசம், அசிதோதம், மாமடு என்னும் நான்கு நீர் ஓடைகள்.

5. பொழில் நான்கு - சயித்திரம், நந்தனம், வைப்பிரசம், திரு தாக்கியம் என்னும் நான்கு சோலைகள்.

6. தருக்கள் நான்கு - கடம்பு, நாவல், அரசு, ஆல் என்னும் நான்கு மரங்கள்.

**மேருமலையும் உக்கிரபாண்டியனும்**

அதுகண்ட உக்கிரபாண்டியன் கோபந்தணிந்து மேருவை நோக்கி, ''நீ இதுகாறும் வாராது காலந்தாழ்த்தியதுஎன்னே?'' என்று வினவினன். மேருமலை, 'வித்தக நம்பியே! கேளும்; அடியேன் நாடோறும் இவ்வுருவத்தோடு சென்று அங்கயற்கண் அம்மையையும் சோமசுந்தரக் கடவுளையும் வழிபடும் நியமம் பூண்டேன்; இன்று ஒரு பெண்ணின் காமமாகிய கடலில் அகப்பட்டு மோகமாகிய சுழியில் ஆழ்ந்து வெள்ளியம்பலத்தில் ஆடும் பெருமான் திருவடிகளை வணங்குதலை மறந்து இதுகாறும் காலந்தாழ்த்து நின்றேன்; இப்பெரும் பாவத்தினல் அடியுப்பட்டேன்; தமியேன், இறைவன் திருவடிக்குத் தவறு செய்த தீமையினை நீக்கினை; இதற்கு அடியேன் செய்யும் கைம்மாறுயாது? அது நிற்க, நீர் இங்கு வந்த காரணம் யாது? சொல்லும்'' என்று கூறிற்று. அதற்குப் பாண்டியன், ''நான் பொருளை விரும்பி வந்தேன்'' என்றான். மேருமலை, ''ஐயனே! நீர் விரும்பிய மாற்றுயர்ந்த செம்பொன், அதோ அந்த மாமரத்தின் நிழலின்கீழ் ஓர் அறையில் பாறையால் மூடப்பட்டுக் கிடக்கிறது'' என்று தன்கையினாலே சுட்டிக்காட்டியது.

**பாண்டியன் செம்பொன் பெற்றுத் தன்னுடு திரும்புதல்**

உக்கிரபாண்டியன் அப்பொன்னறையின் அருகே சென்று, அதனை மூடிய பாறையை நீக்கித்தனது அவாவின் அளவினதாகிய பொன்னை வாரி எடுத்துக்கொண்டு முன்போல மூடி, எஞ்சிய பொன்னையும் தன்னுடையதாக வைத்து, அப்பாறையின்மேலே தனது பெயரையும் [1]குறி (மீன் முத்திரை)யையும் பொறித்துவிட்டு மீண்டும் தன்னுடைய சேனையை அடைந்து, தென்றிசையினை நோக்கித் தேரேறிப் புறப்பட்டான்; பொன் திகழும் மேருமலையையும், போக பூமியையும், பிறவற்றையும் கடந்து, மக்கள் வாழும் நிலப்பகுதியினை வந்தடைந்தான்; மத்திமம், விராடம், மாளவம், தெலுங்கம் என்னும் நாட்டிலுள்ள அரசர்களெல்லோரும் தம் தம் நகரங்கள் தோறும் தனது வருகையை எதிர்நோக்கி, எண்ணில்லாச் சேனைகளோடும் எதிர்கொண்டு, உபசாரம்செய்ய, அதனை ஏற்றுத் தண்டமிழ் வழங்கும் பாண்டி நாட்டை அடைந்து, மதுரை மாநகரை நெருங்கினன்; சோமசுந்தரக் கடவுளுடைய திருக்கோபுரத்தைக் கண்டவுடனே விரைந்து தேரினின்றும் கீழே இறங்கி அட்டாங்க பஞ்சாங்கமாக நிலத்தில் வீழ்ந்து வணங்கி எழுந்து மதுரையை நோக்கி நடந்தான்;

---

1. இங்கே, ''கயலெழுதிய இமய நெற்றியின்'' (சிலப்பதிகாரம்-ஆய்ச்சியர் குரவை) எனவரும் அடி நினைக்கற்பாலது.

அப்போது அந்தணர்களும், துறவிகளும், சைவப்பெருமக்களும், திருக்கோயிலில் பணியாற்றும் அகத்தொண்டர்களும் ஒருங்கு கூடி எதிர்கொள்ள வையையாற்றினைக் கடந்து மதிலின் வாயிலில் புகுந்து மங்கலம் நிறைந்த மதுரைத் திருவீதியின் வழியே சென்று, மறைகள் முழங்கும் திருக்கோயிலை அடைந்து மதுரை நாயகனை வலம் வந்து வணங்கி எழுந்து துதித்துக்கொண்டு தனது திருமாளிகையினை அடைந்தான்.

### பாண்டிநாடு மீண்டும் செழித்தல்

பின்பு, உக்கிரபாண்டியன் மேருமலை அளித்த பொற்குவியலை மலைபோலக் குவித்துப் பல குடிகளுக்கும் அளித்துப் பாதுகாத்துத் [1]தெய்வம், தென்புலத்தார், சுற்றத்தார், விருந்தினர் என்னும் நால் வகையோரையும் ஓம்பிக் களிப்புற்றிருந்தான். அப்போது நாட்டில் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களை நடாத்தும் சிவபெருமானின் ஆணையினால் நடக்கும் கிரகங்கள் மீண்டும் தத்தம் பழைய நிலையை அடைந்தன. பாண்டி நாடு முழுதும் மீண்டும் மழைவளம் பெற்று எங்கும் பெருவளங்கள் பெருகின. அதனால் உயிர்களெல்லாம் பசி நீங்கித் தழைத்தோங்கின.

பொன்மலைக் கடவுள் ஈந்த புண்ணிய நிதியை அந்த
நன்மலை மானக் கூப்பி நல்கிப்பல் குடியும் ஓம்பித்
தென்மலைக் கிழவன் தெய்வம் தென்புல வாணர் ஒக்கல்
தன்மனை விருந்து காத்துத் தருக்கினன் இருக்கும் நாளில்,

ஐவினை நடாத்தும் ஈசன் ஆணையால் நடக்கும் கோளும்
செய்வினைத் திரிவு மாறத் தென்னன்நா(டு) எங்குப் மாரி
பெய்வினை யுடைய தாகிப் பெருவளம் பகிர்ந்து நல்க
உய்வினை யுடைய வாகி உயிரெலாந் தழைத்த அன்றே.

### உக்கிரவழுதி தன் மகனுக்கு முடி சூட்டிச் சிவபதமடைதல்

இங்ஙனம் ஆரம பூண்ட பாண்டியன் என்னும உக்கிரவழுதி ஆட்சி புரிந்து, தன் திருமகனாகிய வீரபாண்டியனுக்கு முடிசூட்டித் தன் அரசுரிமையைத்தந்து, சச்சிதானந்த வடிவாகிய சோமசுந்தரக்கடவுளின் திருவடி நிழலில் இரண்டறக் கலந்தான்.

செய்யுள் — 41
ஆகச் செய்யுள் — 1152

---

1. இங்கே, "'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல்' தானென் றாங்(கு), ஐம்புலத்தா(று) ஓம்பல் தலை" எனவரும் திருக்குறள் கருதற் பாலது.

## 16. வேதத்துக்குப் பொருளருளிச் செய்த படலம்

### உலகம் அழிந்து தோன்றுதல்

ஒரு காலத்திலே ஐம்பெரும் பூதங்களும் தத்தம் நிலையில் மாறுபட்டுப் பதினான்கு உலகங்களும், அவற்றுள் அடங்கிய நான்முகன், திருமால், இந்திரன் முதலாய தேவர்களின் பெரிய பதங்களும் தோன்றியவாறே ஒடுங்கின. ஒரு ஊழிக்காலம் வர, மறைகளும் ஒடுங்கின. பின்னாளிலே கதிரவன் முன்னே மலரும் தாமரை மலர்போல், சிவபெருமான் [1]திருமுன்னர் மீண்டும் யாவும் தோன்றின.[2] முன்பு போலவே பின்னும் சிவபரஞ்சுடர் முத்தொழில்களை நடாத்தியருளத் திருவுளங்கொண்டு திருமாலைப்படைக்க அத்திருமாலினுடையஉந்திக் கமலத்தினின்றும் வண்டுபோல நான்முகன் தோன்றி மூன்றுலகங்களையும் முறையாகப் படைத்தான்.

### முனிவர்கள் வேதப்பொருளை அறிய இயலாது கவலையுறுதல்

அப்போது நஞ்சினையுண்டு வானவருக்கு உயிர் அளித்த தேவதேவனாகிய சிவபெருமான் திருவாக்கில், [3]பிரணவம் தோன்றிற்று. அதினின்றும் வேதங்களெல்லாம் தோன்றின. நைமிசாரணிய வாசிகளாகிய கண்ணுவர், கருக்கர் முதலிய முனிவர்கள் அவ்வேதங்களை ஓதி அவற்றின் உட்பொருளை அறியாது மயங்கி மனமும் முகமும் வாடிக் கவலையுற்றிருந்தார்கள். அச்சமயம் ஆணவமலத்தின் வலியை வென்றவராகிய அரபத்தர் என்னும் ஒரு முனிவர் அங்கு வந்தார். அங்கிருந்த முனிவர்கள் வந்த அம் முனிவரை எதிர்கொண்டு வணங்கி வரவேற்று ஆசனத்தில் இருத்தி வழிபட்டனர்.

### அரபத்தர் முனிவர்களின் வாட்டத்தை வினவுதல்

அரபத்தர் முனிவர்களைப் பார்த்து, ''பற்று, துன்பம், அவா, வெறுப்பு முதலியவற்றை நீக்கிய நீங்கள் சிந்தை வேறுபட்டு முகம் வாடி இருக்கும் காரணம் யாது?'' என்று வினவினார். முனிவர்கள் அரபத்தரை நோக்கி ''ஐயனே! நாங்கள் மயக்கத்திற்கேதுவாகிய மாயையை இயல்பாகவே நீங்கிய சிவபெருமான் அருளிச்செய்த

---

1. திருமுன்னர் – சந்நிதி - சத்தி சங்கற்பம்.

2. இங்கே, ''விண்முதல் பூதலம், ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும், படைத்தளித்(து) அழிப்பமும் மூர்த்திகளாயினை'' (சம்பந்தர் தேவாரம்-திருவெழு கூற்றிருக்கை) எனவும், ''அவனவ ளதுவெனும் அவைமூ வினைமையின்'' (சிவஞானபோத முதற் சூத்திரம்) எனவும் வரும் அடிகள் நினைக்கற்பாலன.

3. பிரணவம் - இது சத்த வடிவாகிய அபரப் பிரணவம்.

வேதங்களைப் பயின்றோம்; அவற்றின் உட்கிடைப் பொருளை உணர்த்தும் குரவன் இல்லாமல் இருண்ட மனத்தையுடையேமாக இருக்கின்றோம்; ஆதலால் இதற்கு ஆலோசனை யாது?'' என்றனர்.

### ஆலவாய்க் கடவுளே வேதப்பொருளை உணர்த்துவர்

அதனைக்கேட்ட அரபத்தர், ''முனிவர்களே! வேதத்தை அருளிச் செய்த சிவபெருமானே அருளுருக்கொண்டு வந்து அவ்வேதத்தின் பொருளையும் உணர்த்தும்; அஃதன்றி வேறு ஆலோசனை யாது உளது கூறீர்? செய்த தவத்தினல் அன்றி வேறு யாதொன்றினுலும் கைகூடும் பொருள் இல்லை. அத்தவங்களும் புண்ணிய தலத்தின் அன்றிப் பயன்படாது. அப்புண்ணிய தலங்களினும் சிறந்த சிவத்தலங்களே எளிதில் பயனளிக்கும்; அச்சிவத்தலங்களினும் உத்தமோத்தம சிவத்தலத்திலேயே பெருந்தவம் எளிதில் விரைந்து பயனளிக்கும். இந்த உத்தமோத்தம சிவத்தலம் உலகமனைத்தும், தனது வடிவமாகஉள்ள விராட்புருடனுடைய பிரமரந்திரத்தினின்றும்பன்னிரண்டங்குலம் மேற்பட்டு விளங்கும் சிவன் முத்திப்புரமாகிய மதுரைப் பதியேயாம். அங்கு அளவற்ற தேவர்களும், முனிவர்களும்பெருந்தவம் செய்து தவத்தின்பேற்றை எளிதில் துய்த்து வசிக்கிருர்கள் என்று அறநூல்கள் கூறும். அம் மதுரையின்கண்ணே சோமசுந்தரக் கடவுளுடைய விண்ணிழி விமானத்திற்குத் தென் பக்கத்தில் கல்லால மரத்தின்நிழலினின்றும் நீங்காதுஎழுந்தருளியிருக்கும் முழுமுதற்கடவுளாகிய தட்சணுமூர்த்தி, தம்மை வழிபடாநின்ற சனகர் முதலியமுனிவர்களுக்குக் கருணையோடு முகமலர்ந்து அளவிறந்த அருங்கலைகள் அனைத்தையும் தெளிவுறுத்தி விளங்கா நிற்பர். அந்த தட்சணுமூர்த்தியே உங்களுக்குத்தாம் அருளிய வேதத்தின் பொருளை உணர்த்தியருளுவர்; நீங்கள் அவர் திருமுன் இருந்து அருந்தவஞ் செய்தற்கு அங்கே செல்லுங்கள்'' என்று கூறினுர்.

### முனிவர்கள் மதுரைக்குச்சென்று இறைவனை வழிபடுதல்

கண்ணுவர் முதலிய முனிவர்கள் அதுகேட்டு மகிழ்ந்து அரபத்தரை வணங்கி அவர் பின் சென்று மதுரையை அடைந்து திருக்கோயிலினுட் புகுந்து பொற்றாமரை வாவியிலே நீராடினுர்கள்; பின்பு எல்லைகடந்த அன்பு மேலோங்க, விரைந்து சென்று, எட்டு வெள்ளிமலைகளின் பிடரியிலே ஒரு பொன்மலை விளங்குவதுபோல் காட்சிதரும் இந்திர விமானத்தின்கண் எழுந்தருளிய தேவதேவனுகிய சோமசுந்தரக்கடவுளைத் தரிசித்துப் பேரின்பக் கடலில்மூழ்கி, நிலத்தில் வீழ்ந்து வணங்கி எழுந்தார்கள்; கைகள் தலைமீது குவிய, கண்கள் ஆனந்தக் கண்ணீராகிய அருவி சொரிய, கால்களும் கைகளும் நடுங்க, வாய்குழறி நின்ருர்கள்.

# திருக்கணித பஞ்சாங்கம்

**தி. கி. நாராயணசாமி, கடலூர்.**

ரௌத்திரி ஆனிமீ (ஜூன்—ஜூலை)

நாள், திதி, நட்சத்திரக் குறிப்பு (மணிக்கணக்கில்)

| தமிழ்வ | ஆங்கிலம்வ | கிழமை | திதி | | நட்சத்திரம் | |
|---|---|---|---|---|---|---|
| 1 | (15—6—80) | ஞாயிறு | திரிதியை | 23-15 | புனர்பூசம் | 16-10 |
| 2 | (16—6—80) | திங்கள் | சதுர்த்தி | 23-42 | பூசம் | 17-05 |
| 3 | (17—6—80) | செவ்வாய் | பஞ்சமி | 24 51 | ஆயில்யம் | 18-43 |
| 4 | (18—6—80) | புதன் | சஷ்டி | 26-37 | மகம் | 20-58 |
| 5 | (19—6—80) | வியாழன் | சப்தமி | 28-50 | பூரம் | 23-42 |
| 6 | (20—6—80) | வெள்ளி | அட்டமிமுழுவதும் | | உத்திரம் | 26-41 |
| 7 | (21—6—80) | சனி | அட்டமி | 7-15 | அஸ்தம்முழுவதும் | |
| 8 | (22—6—80) | ஞாயிறு | நவமி | 9-39 | அஸ்தம் | 5-40 |
| 9 | (23—6—80) | திங்கள் | தசமி | 11-47 | சித்திரை | 8-26 |
| 10 | (24—6—80) | செவ்வாய் | ஏகாதசி | 13-28 | சுவாதி | 10-48 |
| 11 | (25—6—80) | புதன் | துவாதசி | 14-36 | விசாகம் | 12-38 |
| 12 | (26—6—80) | வியாழன் | திரயோதசி | 15-09 | அனுஷம், | 13-53 |
| 13 | (27—6—80) | வெள்ளி | சதுர்த்தசி | 15-06 | கேட்டை | 14-34 |
| 14 | (28—6—80) | சனி | O பௌர்ணமி | 14-32 | மூலம் | 14-44 |
| 15 | (29—6—80) | ஞாயிறு | பிரதமை | 13-31 | பூராடம் | 14-27 |
| 16 | (30—6—80) | திங்கள் | துதியை | 12-07 | உத்திராடம் | 13-48 |
| 17 | ( 1—7—80) | செவ்வாய் | திரிதியை | 10-26 | திருஓணம் | 12-52 |
| 18 | ( 2—7—80) | புதன் | சதுர்த்தி | 8-32 | அவிட்டம் | 11-44 |
| 19 | ( 3—7—80) | வியாழன் | பஞ்சமி<br>சஷ்டி | 6-28<br>28-19 | சதயம் | 10-26 |
| 20 | ( 4—7—80) | வெள்ளி | சப்தமி | 26-05 | பூரட்டாதி | 9-03 |
| 21 | ( 5—7—80) | சனி | அட்டமி | 23-49 | உத்திரட்டாதி | 7-36 |
| 22 | ( 6—7—80) | ஞாயிறு | நவமி | 21-35 | ரேவதி<br>அசுவனி | 6-09<br>28-43 |
| 23 | ( 7—7—80) | திங்கள் | தசமி | 19-26 | பரணி | 27-23 |
| 24 | ( 8—7—80) | செவ்வாய் | ஏகாதசி | 17-24 | *கார்த்திகை | 26-13 |
| 25 | ( 9—7—80) | புதன் | துவாதசி | 15-35 | ரோகிணி | 25-17 |
| 26 | (10—7—80) | வியாழன் | திரயோதசி | 14-04 | மிருசீரிஷம் | 24-41 |
| 27 | (11—7—80) | வெள்ளி | சதுர்த்தசி | 12-56 | திருஆதிரை | 24-30 |
| 28 | (12—7—80) | சனி | ● அமாவாசை | 12-16 | புனர்பூசம் | 24-50 |
| 29 | (13—7—80) | ஞாயிறு | பிரதமை | 12-09 | பூசம் | 25-44 |
| 30 | (14—7—80) | திங்கள் | துதியை | 12-37 | ஆயில்யம் | 27-13 |
| 31 | (15—7—80) | செவ்வாய் | திரிதியை | 13-42 | மகம் | 29-16 |

மாணிக்க வாசகர் குருபூசை



ஐயா,

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால், புரந்தருளப் பெற்று வரும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியில் சென்னைப் பல்கலைக்கழகப் பி.லிட்., (B.Lit.,) பட்டப்படிப்புத் தொடங்கி, கடந்த ஐந்தாண்டுகளாக நடைபெற்று வருகிறது. இப்பட்டப் படிப்பில் தேர்ச்சி பெற்றோர், முதுகலை (M A., தமிழ்) | B.G.L, / B.L,, B.Ed., ஆகிய பட்டங்களைப் பெற வாய்ப்புளது. வரும் 1980-81 முதல் மூன்றாண்டு பட்டப் படிப்பாக அமையப் பெற்று அதற்குரிய வகுப்புத்தொடங்க உள்ளது. இப்படிப்பிற்குச் சங்ககாலம் முதல் இக்காலம் வரையுள்ள இலக்கண இலக்கியங்களும், வரலாறு, கலை, பண்பாடு, கல்வெட்டு, சைவ சித்தாந்த சாத்திரம் ஆகிய நுண்கலைநூல்களும் பாடமாக உள்ளன. நல்ல தமிழார்வமும், பண்பாடும் உடைய மாணவர்கள் இருப்பின் உடன் விண்ணப்பிக்கச் செய்ய விரும்புகிறேன். மேல் நிலை வகுப்பில் (Higher Secondary) தேர்ச்சி பெற்றோரும் P. U. C. யில் தேர்ச்சி பெற்றோரும் இவ்வகுப்பில் சேரத் தகுதி உடையராவர். கலைக்கல்லூரியில் B.A., பட்டப்படிப்புக்கு உரிய பயிற்றுநிலைக் (Tution Fees) கட்டணமும் உரிய பிற சிறப்புக் கட்டணங்களும் கட்டப் பெறுதல் வேண்டும். பிற்பட்ட, தாழ்த்தபட்ட வகுப்பினர்களுக்கு இக்கட்டணங்களில் சலுகைபெற அரசாங்கம் அனுமதித்துள்ளது. உணவும், தங்குமிடமும் தங்கள் சொந்தப் பொறுப்பில் அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். நல்லொழுக்கமும் தமிழார்வமும், இறைபக்தியும் உடையோர் இப்பட்டப்படிப்பில் தேர்ச்சி பெற்றால் வருங்காலத்தில் தமிழும், சைவ சித்தாந்த நுண்ணறிவும் பெருகும் என்பதில் ஐயமில்லை. தக்கவர்களை அனுப்பிவைக்க வேண்டுகிறேன். விண்ணப்பம் பெற ரூபாய் இரண்டைப் பணவிடைமூலம் அனுப்புவதுடன், போதிய அஞ்சல் தலையொட்டிய தம்முகவரி எழுதிய உறையுள் ஒன்றையும் அனுப்பி வைக்கச் செய்யவும்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி ;-
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி,
திருப்பனந்தாள். 612 504,
தஞ்சை மாவட்டம்

தங்களன்புள்ள,
கு. சுந்தரமூர்த்தி

---

ஸ்ரீ காசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
ஸ்ரீகாசி மடம், திருப்பனந்தாள் Pin-612 504.